Registered No. M. 1500.

NAVASAKTI

# நவசக்தி

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

| சந்தா விவரம் | ரு. அ. |
|---|---|
| வருட சந்தா ... | 5 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 0 |
| வெளிநாடு-வருடசந்தா | 6 0 |

**விளம்பர விகிதம்**
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7 0
சில்லரை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு கo | சுக்கிலஞு பங்குனிமீ உ0உ (2—4—30) புதன்கிழமை | பரல் உ

## "நவசக்தி" கிடைக்கும் இடங்கள்

தூத்துக்குடி

ஸ்ரீ ரங்கநாதன்,
ஸ்ரீ சண்முக சச்சிதானந்த சபை,
தூத்துக்குடி.

மதுரை

ச. மாரியப்பன்,
397, வடக்கு மாசி வீதி,
மதுரை.

ஏ. டி. ஜானகிராம் நாயுடு ஸன்ஸ்,
பட்டணம் பொடிக் கடை,
அம்மன் சன்னதி,
மதுரை.

சுப்பையா பிள்ளை,
பட்டணம் பொடிக் கடை,
மேலக்கோபுரத் தெரு,
மதுரை.

நாகர்கோவில்

எக்ஸ்பிரஸ்
நியூஸ் ஏஜன்ஸி,
வடிவீசுவரம்.

பாரதி கதர் நிலயம்.
கோர்ட் ஜங்ஷன்,
கேப் ரோடு, (Cape Road).

செங்கோட்டை

கார்டியன் பிரஸ்,
மெயின் ரோட்.

யாழ்ப்பாணம்

M. S. சுப்பிரமணியம்
அண்டு பிரதர்ஸ்,
'இலக்குமி வாசம்'
வண்ணர் பண்ணை.

இரங்கூன்

நவீனகதா புத்தகசாலை,
122, மங்கமாரி வீதி.

## மார்க்கசகாயதேவர்

உருகா மனமுஞ் சிவஞான
முணரா வறிவு முனதுபுகழ்
ஓதா நாவு மோதக்கேட்
டுவந்தே யினிய நதிபோலப்
பெருகா விழியு முடையேனைப்
பிறவிக் கடலில் வீழாமற்
பேணி யெடுத்திங் கெனதுள்ளம்
பிரியா விரிஞ்சைப் பதிவாழும்
முருகா வருக சதுர்வேத
முதல்வா வருக வினைதீர்க்கும்
மூவா வருக ...
முகவா வருக திருமாலின்
மருகா வருக மயிலேறு
மன்னா வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே.

## புது வருட பண்டிகைக்காக்

ஒரு மாதம் வரையில் தான்
இனும்! இனும்!! இனும்!!

இங்கிலாந்தில் செய்தது மாக்ஷிமை தங்கிய ஜார்ஜ் மன்னரால் புகழப்பெற்றுப் பிரக்யாதி யடைந்த ரிஜிஸ்டர்டு பவுண்டன் பேனா, தங்க பிளேட் கிப்புபோட்டது. இதை வாங்குபவர்களுக்கு மூன்று வருஷம் உத்தரவாதமுள்ள பாக்கெட் லீவர் வாட்சு இனும். இரண்டு பேனாக்கள் வாங்கினால் இரண்டு பாக்கெட் வாட்சுகளாவது அல்லது ஒரு ரோல்டு கோல்டு ரிஸ்டுவாட்சாவது இனும். உடனே எழுதுங்கள். ஒரு பௌண்டன பேனாவின் விலை ரூபா 2-15-0.

விலாசம் :— தி. கிருஷ்ண ஏஜன்ஸி,
தபால் பெட்டி 119, மதராஸ்.

## கணித சோதிடம்

பாகித கணிதப்படி கணிதஞ் செய்து பலன்கள் கூறப்படும். ஒரு வருஷத்திற்கு மாதவாரி பலன்கள் நுட்பமாயும் விவரமாயும் எழுதி அனுப்ப ரூபாய் இரண்டு. ஆருடம் 5 கேள்விகளுக்கு விவரமான பதில் எழுதி அனுப்ப ரூபாய் ஒன்று. விவாக விஷயம் ரூபாய் ஒன்று. விவாக விஷயத்தைப் பற்றி நாங்கள் எழுதி அனுப்புவதைக் கொண்டு பெண்ணுக்குப் புருஷனும் புருஷனுக்குப் பெண்ணும் இன்னாரென்று வெகு சுலபமாய் நிச்சயிக்கலாம். எங்களிடம் அருமையான பூர்வீக ஜோதிட நூற்கள் பலவுள்ளதால், நாங்கள் எழுதி அனுப்பும் பலன்கள் பொதுப் பலன்களாயிராமல் விவரமாகவும் சாஸ்திரீகமாகவு மிருக்கும். உங்கள் ஜாதகமாவது கடிதம் எழுதும் நேரத்தையாவது தெரிவியுங்கள்.

தே. ஆறுமுக செட்டி,
முதலியார் பேட்டை, புதுச்சேரி.

ரூபா 1500 உத்தரவாதம்

## தினகரன் கல்நார் பற்பொடி

THINAKARAN KALNAR TOOTH POWDER

உங்கள் பணத்துக்குத் தகுந்த பெறுமானமுள்ளது :— இது ஒன்று தான் எல்லாவித பரீக்ஷைகளிலும் முதன்மை பெற்று விளங்குகிறது. கல்நார் இல்லை என்றும், அல்லது குணமில்லை என்றும் நிரூபிப்பவருக்கு மேல் கண்ட ரூ. 1500 உத்தரவாதம் செய்யப்படும்.

பெரிய டப்பி அணு 4—டஜன் ரு. 2-10-0.
சிறிய டப்பி ,, 2-6.—டஜன் ரு. 1-10-0.

எல்லா ஊர்க்கடைகளிலும் கிடைக்கும். தபாற் செலவு வேறு.
எல்லா வியாதிகளுக்கும் விபரம் அடங்கிய மருந்து கேட்லாக்குக்கு எழுதுங்கள்.

கே. எஸ். ஏ. எஸ். பிரதர்ஸ்,
தினகரன் மெடிகல் ஸ்டோர்ஸ்,
நெ. 4, பந்தர் தெரு, மதராஸ். 176, 178, சிலிகிரோட், சிங்கப்பூர்.

## "பித்தன்" (வனமலர்ச் சங்க வெளியீடு)

மக்கள் சமரசம், கிராம முன்னேற்றம், தமிழ் மொழி வளர்ச்சி முதலியவைகளுக்காகப் பாடுபடுவது.

இதைப்பற்றிச் சில அபிப்பிராயங்கள் :—

"'பித்தனை'ப் பற்றி என் அபிப்பிராயம் என்ன? காரணம் சொல்ல முடியாது. அது வெளிவந்தது முதல் அதன்மேல் மோகங் கொண்டு விட்டேன்"—திரு. சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரி.

"'பித்தன்' பெரிதும் மாணுக்கர்களால் நடத்தப்படும் பத்திரிகை. வனமலர்ச் சங்கத்தார் தாய் மொழிப்பித்தால் விழுங்கப்பட்டவராய்ப் "பித்தனை" நடத்தி வருகிறார். இஃதொன்றே "பித்தன்" தொண்டின் விழுப்பத்தை உணர்த்துவதாகும்........பலதிறக் கட்டுரைகளைப் "பித்தன்" தாங்கி வருகிறான். இளைஞர்களின் மாசிலா மனதைப் "பித்தனி"ற் பார்க்கலாம்.........தமிழ் நாடு "பித்தனை" ஆதரிப்பதாக"—'நவசக்தி.'

"'பொதுஜன நன்மைக் குழைப்பதையே' நோக்கமாகக் கொண்ட இச்சங்கம் இப்பத்திரிகை வாயிலான் அரிய தொண்டு ஆற்றி வருகிறதென்றே கூறவேண்டும்"—'இராமகிருஷ்ண விஜயம்.'

இன்னும் பல பத்திரிகைகளாலும் பிரமுகர்களாலும் போற்றப்படுவது.
விளம்பரங்களுக்குச் சிறந்த பத்திரிகை.

வருஷ சந்தா :—உள் நாடு ரூ. 1 0 0 வெளி நாடு ரூ. 1 4 0

மாதிரிப்பிரதி வேண்டுவோர் 2 அணு தபாற்றலை அனுப்பவும்.

விலாசம் :—மானேஜர், 'பித்தன்',
12, கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.

விநாயகர்

## பனுவல் திரட்டு

விநாயகக் கடவுள்மீது ஆன்றோர் அருளிச் செய்துள்ள பல நூல்களினின்றும் திரட்டப் பட்டது. பூஜா காலங்களில் ஓதுதற்குரிய சிறந்த நூல். நல்ல காகிதத்தில் அச்சிடப் பட்டது. விலை அணு 6.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

பெட்ரோமாக்ஸ் லைட்
மாண்டில், குளோப், அதன் தனித்தனி சாமான்கள் எல்லாம் நயமாய் கிடைக்கும்

பூச்சிவண்டர்
கியாஸ் லைட்
உறுதியானது. ரிபேர் ஏற்படாதது. இந்த மேக்கர் மதராசில் கிடைக்காது.

முழுவிபர கேட்லாக், ஒரு அணு ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும்.

Importers—
லன் கம்பெனி, தஞ்சாவூர்.

## கந்தபுராணச்சுருக்கம்

### மூலமும் பொழிப்புரையும் விருத்தியும்

இந்நூல் ஸ்ரீமத் - சம்பந்தசரணுலய சுவாமிகளால் சொற்சுவை, பொருட்சுவை, சந்தச்சுவை முதலியன ததும்ப 1000 பாடல்களாகப் பாடப்பட்டது. கடல்போல் பரந்துகிடக்கும் பெரிய கந்தபுராணக் கதையை இனிது விளக்குவது. மூலத்திற்கேற்ற பொழிப்புரையும், விருத்தியும் பலநூற் பிரமாணங்களுடன் எழுதப்பட்டுள்ளன. டிம்மி 8-பக்க அளவில் நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டது. 496 பக்கங் கொண்டது.

காலிகோ பயிண்டு விலை ரூ. 3.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

## கணித ஜோதிடம்

கணிதரீதியாய் ஆராய்ந்து பலன் கூறப்பட்டு வருகிறது. ஒரு வருஷ மாத வாரியாக அல்லது திசாபுத்தி படிக்கு இரண்டு வருஷ பலன் எழுத ரூபா 2. பாதம் ஒன்றுக்கு ஒன்பது பலனுக, ஒரு வருஷப் பலன் எழுத ரூ. 10. ஒரு வருஷத்திற்குத் தினப்பலன் எழுத ரூபா 20. ஜாதகம் இல்லாதவர் கடிதம் எழுதும் நேரத்தையும் பெயரையும் எழுதவும். ஏழு கேள்விகளுக்கு ரூபா 1. பொருத்தம்பார்க்க ரூபா 1. ஜாதகக்குறிப்பு எழுத ரூபா 2. ஆகிநூல்களைக் கொண்டே ஆராய்ச்சி யுற்றிருக்கின்றோம். ஒருவருடைய ஆயுளை இன்ன வருஷம் மாதம் தினம் நட்சத்திரம் இறந்துபோகும் நேரம் உள்பட தெரிந்து அத்துடன் அஷ்டவர்க்க பலன் எழுத ரூபா 25. சந்தான மில்லாதவர்க்கு ஏற்படும் பதின் மூன்று தோஷங்களையும், இன்ன தோஷம் அஃது அடைந்த விபரம் அதன் நிவர்த்தி இவற்றைத் தெரிந்துசொல்ல ரூபா 5. அன்னிய நாட்டு நண்பர்கள் முன் பணம் அனுப்ப வேண்டியது.

ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் அபிப்பிராயம் :

"ஸ்ரீமான் சு. அப்பாஜி ஜோசியர் அவர்களை யான் ஏறக்குறைய ஓராண்டளவாக அறிவேன். அவரது சோதிடப் புலமையின் ஆற்றலையும், பலன்கூறும் திறத்தையும் ஆராய்ந்து உணரும் வாய்ப்பு பலமுறை எனக்குக் கிடைத்தது. அவர் பண்டைச் சோதிட நூல் பல ஆராய்ந்து தெளிவு பெற்றிருத்தலை யுணர்ந்தேன். அவர் பலர்க்குக் கூறிய பலன்கள் நடைமுறையில் உறுதி பெற்றதையும் கண்டேன். கணிதக் குறிப்பும் நிரம்பப் பொறிக்கும் ஆற்றல் அவர்பால் அமைந்திருத்தல் வியக்கத்தக்கதா யிருக்கிறது. தமிழ்நாட்டிலுள்ள மிகச் சில சோதிடக் கலைஞர்களுள் ஸ்ரீமான் அப்பாஜி ஜோசியரும் ஒருவர் என்று கூறல் மிகையாகாது. ஸ்ரீமான் அப்பாஜி ஜோசியர் அவர்கள் தம்வாழ்வில் வெற்றி பெறுமாறு அறுமுகக் கடவுள் திருவடியை வழுத்துகிறேன்."

அப்பாஜி ஜோஸ்யர்,
நெ. 321, ஐரோட், திருவல்லிக்கேணி, மதராஸ்.

10-ம் பதிப்பு

எங்கள் லேடி டிரேட் மார்க்

## ஆங்கில ஆசான்

அல்லது

### ஆங்கில போதினி

தமிழ் தெரிந்தவர்கள் உபாத்தியாயர் இல்லாமலே ஆங்கில பாஷையைச் சுலபமாய்க் கற்றுக் கொள்ளலாம். 55,600 புத்தகங்கள் செலவா யிருப்பதினாலேயே இதன் மேன்மை விளங்கும். எங்கள் (லேடி டிரேட் மார்க்) புத்தகத்தைப் பார்த்து வாங்குங்கள். 800 பக்கமுள்ள புத்தகம் விலை ரூபா 2.

☞ இதே விலைக்குத் தெலுங்கிலும் கிடைக்கும்

தி. இராஜகோபால் முதலியார்,
302, தங்கசாலைத் தெரு, மதராஸ்.

40 வருஷங்களாக

ஹிமாலயத்திலிருந்து
கன்னியா குமரிவரையில்

## அமிருதாஞ்சனம்

AMRUTANJAN
AMRUTAN
Best Indian Pain Balm
Amrutanjan
BOMBAY

நவசக்தியாக
பெயர்பெற்றுவிட்டது

எல்லாவித நோய்களுக்கும், வலிகளுக்கும்
அரிய குடும்ப ஔஷதம்

அமிர்தாஞ்சன் டிபோ,
மதராஸ். கல்கத்தா, பம்பாய்.

வந்தேமாதரம்

# நவசக்தி

“ என்கடன் பணிசெய்து கிடப்பதே ”

சிலம்பு ௧௦ | சுக்கிலஹு பங்குனிமீ ௨௦௨ (2—4—30) புதன்கிழமை | பரல் ௨௩

‘பெரிய புராணம்’ என்ற பொருள் பற்றிச் சென்னைச் சர்வகலா சங்கத்தின் ஆதரவில் பச்சையப்பன் கல்லூரியில் கோவை சைவத் திருவாளர் வழக்கறிஞர் சி. கே. சுப்பிரமணிய முதலியார் பி. ஏ. அவர்கள் 31-1-1930 1, 3-2-1930 ஆக மூன்று நாட்களிலும் நிகழ்த்திய மூன்று சொற்பொழிவுகளின் சுருக்கம் வருமாறு:—

(சென்ற வாரத் தொடர்ச்சி)

## பெரிய புராணம்

திருவாளர் சி. கே. சுப்பிரமணிய முதலியார் சொற்பொழிவு

### 2. பெரிய புராணமும் அதன் கலை ஞானங்களும்

#### அரச அங்கங்கள் அமைச்சு

ஆயின் நீண்ட கால அளவிலே அன்னிய படை எடுப்புகளும் அன்னியர் ஆட்சியும் ஆயுதச் சட்டமும் தண்டச் சட்டங்களும் சேர்ந்து ஆண் மக்களை யெல்லாம் பேடிகளாக ஆக்கிவிட்ட இக் காலத்து மக்கள், நமது தமிழ் மக்கள் முன்னாளில் தங்கு தடையின்றி ஆயுதந் தாங்கிச் சென்று செய்த வீரச் செயல்களைக் கண்டு இவை அகாகரிகச் செய்திகள் என்று நகைக்கவும் கூடும். ஆனால் அந்த முற்காலத் தமிழ் மக்கள் இந்நாளில் வந்து நம்மைக் காண்பார்களேயானால் “நமது பின் சந்ததியார்களாகிய தமிழர் இவ்வாறு பேடிகளாகி விட்டனரே” என்று தாமும் இரங்கி எள்ளி நகைப்பர். அவ்வாறு ஆயுதங்களைத் தடையின்றித்தாங்கிச்சென்ற தமிழ் முன்னோர்கள் நீதி பிறழக் கண்டபோது அவற்றை உபயோகித்தும் வந்தனர். ஆனால் அவர்கள் ஆயுதங்களைத் தவறான வழியில் உபயோகித்த போது அரச தண்டனையும் பெற்றார்கள்.

பே ரரசர்க்குத் திறை கொடாமலும் ஆணைக்கு அடங்காமலும் உள்ள சிற்றரசர் மீது படை எடுத்துச் சென்று அவர்களை வென்று அடிப்படுத்துதலும் அக் காலத்து மந்திரிகளின் கடமைகளில் ஒன்று என்பது,

“ ஈங்கு நுமக் கெதிர் நிற்கும்
அர ணுளதோ ”

என்று புகழ்ச் சோழர் சொல்லித் தமது அமைச்சர்களை அதிகன் என்பவன் மீது படை எடுக்கும்படி ஏவின வரலாற்றில் காண்கின்றோம்.

குடிகளுக்குத் தீங்கும் அநீதியும் வாராமல் காத்தலும் அமைச்சர் கடனே யாம்: தன் கன்றினை அரச குமரான் தேர்ச் சக்கரத்தில் இறக்க விட்டதாய்ப் பசு வந்து அரண்மனையில் ஆராய்ச்சி மணியை அடித்த போது மனு நீதிச் சோழர்,

“ வருந்திய பசுவை நோக்கி
என்னிதற் குற்ற தென்பான்
அமைச்சரை இகழ்ந்து நோக்கி ”

னார் என்பது சரிதம்.

யாராவது பெரியோர்கள், செல்வாக்குள்ளவர்களால் குற்றம் சுமத்தப்பட்டு அவர்களை விசாரணைக்காக அரசர் சபையிலே கொண்டு வருதல் வேண்டு மானால் ஒரு மந்திரியைச் சேனையுடன் அனுப்பி அவர்களைக் கொண்டு வரச் செய்தலும் அக் கால வழக்கமாயிருந்தது என்பது குணபரன் என்ற மகேந்திர வர்மன் தனது சமண குருமார் சொற் கேட்டுத் திருவதிகையிலிருந்த வாகீசரைச் சேனையையும் மந்திரியையும் அனுப்பிக் கொண்டு வரச் செய்தான் என்பது முதலிய வரலாறுகளால் தெரிகிறது. இக் காலத்தும் அவ்வாறு நிகழ்ச்சி காண்கின்றது ஞாபகப் படுத்திக் கொள்ளத் தக்கதாம்.

சமயப் பாது காவலும் அந் நாள் அரசர் கடமைகளில் ஒன்றாக இருந்தது. அது, சம்பந்த சுவாமிகள் அப்பர் சுவாமிகள் புராணங்களிலே சமணர்கள் தங்கள் அரசர்களிடம் சொல்லி அவர்களைத் தூண்டுகின்ற வரலாற்றினின்று தெரிகிறது. ஆனால் அரசர்கள் ஒரு சார்பு பற்றி ஒன்றையும் துணிந்து விடாதபடி பின்னும் விசாரித்து அறிந்த பின்பே மேற் காரியங்களை நடத்தியிருக்கிறார்கள்.

“ கைதவம் பேச மாட்டேன்
என்று கைதவனும் சொன்னான் ”

என்பது சம்பந்த மூர்த்திகள் புராணம் 749. தண்டியடிகள் சரிதத்திலேயும், அப்பர்சுவாமிகள் புராணத்திலே பழயாறை வடதளிக் கோயிலை மறைத்ததை ஈசுவராணையின் படி அரசர் கண்டு பிடித்து வெளிப்படுத்திய வரலாற்றிலேயும் சமயப் பாதுகாப்புச் செய்யும் போது அக்காலத்து அரசர்கள் தத்தம் சமயச் சார்புபற்றியே ஒழுகி விடாது தீர விசாரித்து முறை செய்தார்கள் என்பது விளங்கும்.

ஒரு காரியத்தை முடிக்க முற்பட்டவர்கள் உண்ணாவிரதங் கிடக்கும் வழக்கம் அக்காலத்தும் பெரியோர் கையாண்டிருந்தனர் என்பது மேற்கூறிய பழையாறை வடதளி வரலாற்றில் அப்பர் சுவாமிகள் சமணர்களால் மறைத்துச் சமணர் பாழியாக்கப்பட்ட திருக்கோயிலின் முன்னே,

“ வண்ணங் கண்டு நானும்மை
வணங்கி யன்றிப் போகேனென்
றெண்ண முடிக்கும் வாகீசர்
இருந்தா ரமுது செய்யாதே ”

என்பதனால் விளங்குகிறது. இவ்வாறு நாட்டுச் சமயப் பாது காவலில் அரசர் வழுவிய போது அவரைத் தக்கபடி சூழ்ந்து வழிப்படுத்தி நிறுத்துதல் அமைச்சர் கடமைகளில் ஒன்று என்பது குலச்சிறையார் சரிதத்திற் காண்கின்றோம்.

குடிகளிடத்தே அநீதியான கொடுமைகள் நிகழ்ந்தால் அதற்கு அரசனையே பொறுப்பாகக் கொண்டனர். அரசாணை முறை பிறழ்ந்தமையே குடிகளைக் கொடுமைகளில் புகுத்துவது என்பது தமிழர் கொள்கை. சம்பந்த சுவாமிகள் திருக்கூட்டத்துடன் தூங்கிய திருமடத்தில் சமணர்கள் இரவிலே தீ வைத்தார்கள். இதை அறிந்த சுவாமிகள் “மன்புரக்கு மெய்ம்முறை வழுவென மனங் கொண்டார்.” வெய்ய தீங்கு இது வேந்தன் மேலதே யாகும் என்று தமது தூய உள்ளத்திற் கொண்டு “சைவர் வாழ் மடத்துச் சமணர்களிட்ட தீத்தழல் போய்ப் பையவே சென்று பாண்டியற்காக” என்று பணித்தார். அது மெய்த் திருவாக் காதலாலே அவ்வாறே போய்ப் பெருஞ் சுரமாக மூண்டது என்பது சரிதம்.

மனிதர்களையே யன்றி ஏனைய உயிர்களையும் நீதி முறையிலே பாதுகாப்பது அரசர் கடமை என்று தமிழர் கொண்டனர் என்பதை ஒருவாறு மேலே சுட்டிய மனுநீதிச் சோழர் வரலாற்றினாற் கண்டோம். கழறிற்றறிவார் என்கிற சேரமான் பெருமான் நாயனார் சரிதத்தாலே இவ்வுண்மை மிக வலுப்படுகின்றது. திருவஞ்சைக் களத்திலே திருத் தொண்டே செய்து கொண்டிருந்த இளவரசராகிய பெருமாக் கோதையராகிய நாயனாரிடம் மந்திரிகள் சென்று “அரசுரிமை நும்மேல தாய் நின்றது. அரசு தாங்கவேண்டும்” என்று அழைத்த போது ‘இவர்கள் மொழி நான் செய்யும் இன்பம் பெருகுந் திருத் தொண்டுக் கிடையூறாக இருக்கது. ஆயினும் அன்பு நிலை மெய் வழுவாமல் அரசு புரப்பதற்குத் திருவருள் துணை செய்யுமாயின் அதனை இறைவனிடத்துச் சென்றறிவேன்’ என்று திருவஞ்சைக் களத்துப் பெருமானிடம் சென்று தொழுது விண்ணப்பித்தார். பெருமானிடம் அவ்வாறே அரசுடனே அன்பு வழிபாடும் கூடியிருக்கும் பேற்றினை யடைந்தார். அதனுடன் யாவும் யாருங் கழறினவு மறியும் உணர்வும் வரப்பெற்றார் என்பது சரிதம். அதனால்தான் அவர்க்குக் கழறிற்றறிவார் என்று பெயராயிற்று. அது கொண்டு அவர் தம் கீழ் வாழும் எவ்வுயிர்களும் பேசுவன எல்லாம் அறிந்து நீதி செலுத்த வல்லவரானார். இதுவே தமிழரசர் நீதியின் இலக்கியமாகும். இதைத் தான் பைபில வாதம் (Knowledge of the language of animals, beasts and birds) என்று 64 கலை ஞானங்களில் வகுத்துள்ளார்கள் எனத் தெரிகின்றோம்.

#### போர் முறை

இனித் தமிழரசர் போர் முறையைப் பற்றிப் பார்ப்போமானால் இதுவே புறப் பொருளிலே விதந்து விளக்கப்பெற்றுள்ளது. அந்நாளில் தமிழர்கள் போரில் மிக வல்லவராயிருந்தனர். பல போர்களிலே பற்பல வேற்றரசர்களையும் வென்றனர். தேர்ப் படை யானைப்படை குதிரைப்படை காலாட் படை என்பன அவர்கள் கைக் கொண்ட நால்வகைப் படையாம். தேர் வீரர்கள் தம்மோடொத்த தேர் வீரருடனும் ஏனையோரும் அம் முறையாளருடனும் போர் புரிவர்; அதை விட்டு விலகி யானை, குதிரை வீரர் காலாட்களுடன் போர் செய்யார். இது அவர்கள் கையாண்ட அறப் போர். போர்க்கெழுந்து பகையரணை முற்றுவிப் போரும் அந்த அரண் உள்ளிருந்து தற்காத்துப் பொருவோரும் வஞ்சி காஞ்சி முதலிய எற்றனவாகிய மாலைகளைச் சூடிப் போர் புரியும் முறை கையாளப் பெற்றன. இவை புறப் பொருளிலே கண்ட முறை யாகும்.

“ வருவிற் கதை சக்கர முக்காம் வாள்
சுரிகைப் படைசத்திகழுக் கடைவேல்
எரிமுத்தலைகப் பணமெற் பயில்கோல் ”

என்பன அக் காலத்துப் போரில் பயின்ற தமிழர்களது படைகளாகும். தமிழ் வீரர் போரில் தம் உயிர் கொடுத்து இறந்து படும் வரை போர் செய்து செயம் பெறுதலையே குறிக் கோளாகக் கொண்டு போர் புரிவர். அன்றிப் புறங் கொடுத்து ஓடுதல் பின்னிடைதல் முதலியன மிக இழிவாகவும் பேடியர் செயலாகவும் கருதப் பெற்றன. ‘உண்ட சோறு கழிக்க’ உயிரையும் கொடுத்துப் போர்த் தமிழ் வீரர்கள் போர் செய்வர்.

“மண்டு போரின் மலைப் பவர்
துண்ட மாயிட வுற்றெதிர்
கண்ட ராவி கழித்தனர்
உண்ட சோறு கழிக்கவே ”

என்று திலகவதியாருக்கு மண மகனாய் நிச்சயிக்கப் பெற்ற கலிப்பகையார் மன்னவற்காய் மலையப் போய்ப் ‘பொரு வாரும்’ போர்க் களத்திலுயிர் கொடுத்துப் புகழ் கொண்டார் என்று காண்கின்றோம். கூலி கொடுத்துப் போர் வீரர்களது சேவகத்தைக் கொள்வதும் அவர்களைக் கொண்டு மாற்றாருடன் போர் செய்வதும் அந்நாளில் ஒரு வழக்கமாயிருந்ததென்று முனையடுவார் சரிதத்தால் அறிகின்றோம். இன்னும் போர் முறைகளையும் தமிழர் வீரத்தையும் புகழ்ச் சோழ நாயனார் புராணத்தும் நின்ற சீர் நெடு மாற நாயனார் புராணத்தும் பிற இடத்தும் பரக்கக் காணலாம். வேளாள மக்கள் அந்நாளில் சேனைத் தலைவர்களாகவும் போர் வல்லவர்களாகவும் விளங்கினார்கள். மேலே சுட்டிய கலிப்பகையார் முனையடுவார் என்ற இவர்களேயன்றி ஏயர் கோன் கலிக்காமரும் சேனாதிபதியாராகிய மானக்கஞ்சாற நாயனாரும், போர்த் தந்திரியாராகியகோட்புலி நாயனாரும் வேளாளர்களேயாம். கோட்புலியார் சோழர்களிடம் தந்திரத் தொழில் பூண்டு அவர்களுக் காய்ப் போர் முனையிற் சென்று வேற்றுப் புலம் பெருகத் துயர்விளையப் போர் விளைத்துப் புகழ் விளைப்பார்’ என்று காண்கின்றோம். நமது பெரிய புராண ஆசிரியரான சேக்கிழார் சுவாமிகளும் அவர் தம்பியார் பாலறு வாயரும் சோழர்களிடம் அமைச்சர்களாயிருந்தமையும் காண்கின்றோம். எனவே வேளாளர்க்கு உழு தொழிலே தொழிலாம் என்பது சரியல்ல. அவர்க்கு மந்திரித் தொழிலும், சேனைத் தலைமையும் போர் செய்தலும் அந்நாளில் உரிமைத் தொழில்களாயின எனக் காண்கின்றோம். வேளாளர் பெரு மக்களைச் சூத்திரர் என்று பேரிட்டு அவர்களுக்குப் பிற மூவரிடம் ஏவல் செய்யும் தொழிலே யாக்கும் பிறர்கள் இதனை ஊன்றி நோக்குவார்களாக. உழுதுண்டு வாழ்வது கொண்டே இவர்கள் தொழுதுண்டு வாழ்பவர்களல்ல என்று துணியப்படும்.

“ உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்
மற் றெல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர் ”

என்ற தேவர் வாக்கே இதற் காதாரமாம்.

தொழுக் குலத்தாராக வேளாளர்கள் இருந்தால் அவர்கள் கம்பர் சொல்கிறபடி,

"வெண்ணெயூர்ச் சடையன் றங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மவுலி"

என்கிற அரசர்க்குக் கிரீடங் கொடுக்கும் மாபினராயிருத்தல் பொருந்தாதாம்.

'வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"

என்ற தொல்காப்பியமும் இங்கே குறிக்கத் தக்கதாம். எனவே தமிழ்நாட்டுக் குடி மக்கட் பிரிப்பில் வேளாளர் என்ற பகுப்பினர் வேறு. ஆரியர் கொணர்ந்த நால்வகைச் சாதியிலே சூத்திரர் என்ற தொழுதுண் குலத்தார் வேறு என்பது வெளிப்படை. ஆனல் காலக்கிரமத்திலே ஆரியர் வகுப்பும் தமிழர் வகுப்பும் ஒன்று பட்டு விரவி வாழத் தலைப்பட்ட பின்னுளிலே அவ்விரு வேறு வகுப்பும் ஒன்றாக விரவி வேளாளர்களை ஆரியச் சூத்திரரோடு மயங்கிப் பிறழப் பேசும் வழக்கம் எழுந்தது என்று தோன்றுகின்றது.

இனி வேளாளர்களேயன்றிப் பிற குலத்தவர்களும் அந்நாளிலே போர்த் தலைவர்களாகவும் போர்வீரர்களாகவும் விளங்கினர்கள் என்பது சிறத்தொண்ட நாயனர் புராணத்தும் பிற இடங்களிலும் அறிகின்றோம். சிறத்தொண்டர் மாமாத்திரர் குலத்தைச் சேர்ந்தவர். இதனையே இக்காலத்து வழங்கும் ஒரு வகை மருத்துவகுலம் என்கின்றூர்கள். இதனைச் சிலர் ஆமாத்தியர் என்பதனோடு பிறழ்வாக உணர்ந்து இவரைப் பிராமணர் எனவும் சொல்வாராயினர். அது தவறு.

இவர் குலத்தைப்பற்றிச் சேக்கிழார் சுவாமிகள் 'உலகில் வளருயிர்க்கெல்லா முயர் காவற் ரெழில்பூண்டு பலர் புகழ் மாமாத்திரர் தங்குலம்' என்று எடுத்துரைத் துள்ளார்கள். எனவே இது ஒரு வகை மருத்துவ குலம் என்பது குறிப்பாகத் தெரிகின்றது. இவர் நரசிங்க வர்மன் என்ற "மன்னவர்க்குத் தண்டு போய் வட புலத்து வாதாவித் தொன்னகரந் துகளாகத் துணை நெடுங்கை வரை புகைத்து" வென்று வந்த வரலாறு இற்றை நாட் சரித ஆராய்ச்சியாளரால் சாசனங்களால் உறுதி பெற்றுத் திருஞான சம்பந்த சுவாமிகள் வாழ்ந்த கால நிச்சயம் செய்வதற்குப் பெருந்துணையாக நின்றது யாவரும் அறிவர். பெரிய புராணமானது உண்மைச் சரித நிலையே எழுந்த உயர்ந்த இலக்கியமென்பதற்கு இது ஒரு பெரிய சாட்சியாகும். ஆகவே பெரிய புராணத்திலே போந்த மெய்யடியார்களுட் பலர் சிறந்த போர்வீரர்களாகவும் போர்த் தலைவர்களாகவும் விளங்கினர்கள் என்பது இந்நாளிற் சைவர்க்கும் பிறர்க்கும் ஒரு வியப்பையே தரும். அடித்தால் அழமுடியாத பேடிகளே அடியார் கூட்டத்தாராவர் என்று இந்நாளிலே சிலர் கொண்டிருக்கும் எண்ணம் போலியாய் ஒழியும் என்பது இதனுல் விளங்குகின்றது. அடியார்கள் மகா வீரர்கள் என்று சேக்கிழார் சுவாமிகள் கூறுகின்றூர்.

'ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே
பாரமீசன் பணியல தொன்றிலார்
ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீர மென்னல் விளம்புந் தகையதோ'?

என்பது பெரிய புராணம்.

"வானந் துளங்கிலென்?
மண் கம்ப மாகிலென்?
மால் வரையும்
தானந் துளங்கித்
தலை தடுமாறில் என்?
தண் கடலும்
மீனம் படிலென்?
விரிசுடர் வீழிலென்?
வேலை நஞ்சுண்டு
ஊன மொன் றில்லா
ஒருவனுக் காட்பட்ட
உத்தமர்க்கே.

என்பது அப்பர் சுவாமிகள் திருவாக்கு. அதே அப்பர் சுவாமிகள்தான் தம்மைக் காலால் இடறிக் கொல்லும் பொருட்டு அரசன் யானையை ஏவி விட்டபோது,

"அஞ்சுவது யாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை"

என்று வீரமாய் அஞ்சா நெஞ்சுடன் நின்று வெற்றி கொண்டார்.

'ஈனர்கட் கெளியே னலேன்
திருவாலவா யான் நிற்கவே'

என்பது எண்ணுயிரம் சமணர்க்கு நடுவே தனித்து நின்ற பாலராகிய ஞானசம்பந்த சுவாமிகள் தீரமாகிய வாக்கு.

ஆகவே தமிழர்கள் போர் முறையில் ஆயுதந்தாங்கிப் போர் செய்தும் வெற்றி பெறுவர். அன்றிப் போர் செய்யாமலே மனத் திண்மையினாலேயும் எதிர்த்து நின்று வெற்றி பெறுவர் எனக் காண்கின்றோம்.

(தொடரும்)

## வடாறுகாடு மண்டலதேச சேவகர்கள் கூட்டம்

வடாறுகாடு மண்டல தேச சேவகர்களுடைய கூட்டம் ஒன்று 7-4-30ந்தேதி திங்கட்கிழமை பிற்பகல் 3 மணிக்குக் குடியாத்தம் காமாட்சி யம்மன் கோயிலில் நடைபெறும். அங்கு அதுசமயம், தமிழ்நாட்டு சட்டமறுப்புத் தலைவர், ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் தமிழ் நாட்டில் ஆரம்பிக்கப்போகும் உப்பு வரி மறுப்பு உரிமைப்போருக்கு, எப்படி, எந்த வகையில், வடாறுகாடு மண்டல சேவகர்களும், மகாஜனங்களும் துணைசெய்ய வேண்டும் என்பதைப்பற்றி ஆலோசிக்கப்படும். பிரசங்கம் ஒன்றும் நடைபெறுது. ஆயினும், அன்றுமாலை 5-30மணிக்கு ஆற்றில் போலீஸ்ஸ்டேஷனுக்கெதிரிலுள்ளசுதந்தரக் கொடி மேடையில் முன்பாக ஒரு பெரிய மகாநாடு நடைபெறும். பல தேச சேவகர்கள் பேசுவார்கள். ஷை ஆலோசனை கூட்டத்திற்கு வரும்படி வடாறுகாடு ஜில்லா தேச சேவகர்களனைவருக்கும் அழைப்புக்கடிதங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. சில நண்பர்களுடையவிலாசங்கள் தெரியவில்லை. எனவே, இவர்களும், மற்றும் தேச சேவகர்களுடன் சேர்ந்து கலந்துழைக்க நினைக்கும் ஆண் பெண் அனைவரும் மேற்கண்ட இடத்துக்கு வந்து சேர்ந்து கலந்து நாட்டுக்கு நலம் பயக்க முன்வருவார்களென்று நம்புகிறேன்.

குடியாத்தம் - மு. சாமிநாதன்.

## தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி அறிக்கை

வேலூரில் கூடிய தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டியார் நம் மாகாணத்திலுள்ள ஒவ்வொரு தாலுக்காக் காங்கிரஸ் கமிட்டியாரும் வருகிற ஏப்ரல்மீ 15உக்குள் குறைந்தது 500 அங்கத்தினர்களாவது சேர்க்க வேண்டுமென்று தீர்மானித்திருப்பதால் அத்தீர்மானத்தை நம் ஜில்லாவிலுள்ள ஒவ்வொருதாலுக்காக்காங்கிரஸ் கமிட்டிகளிலும் நிறைவேற்ற வேண்டியது முக்கியமான கடமையாகும். இவ்விஷயம் பூர்த்தியாவதற்கு நம் ஜில்லாவிலுள்ள ஒவ்வொரு காங்கிரஸ் வாதியும் பூரண முயற்சி எடுத்துக் கொண்டு குறிப்பிட்ட காலத்திற்குள் மேல் கண்ட அங்கத்தினர்களின் விகிதத்தைச் சேர்த்துப் பூர்த்தி செய்ய உதவ வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன் என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

வங்காளத்திலுள்ள நவாப்கஞ் என்னும் நகருக்கு ஒரு மாதத்திற்கு முன்னர் போந்த ஒரு சாது, தாம் பூமிக்குள் ஐந்து நாட்கள் வரை புதைக்கப்பட்டு இருக்கமுடியுமெனக் கூறினர். அங்ஙனமே பூமியில் ஒரு குழி வெட்டப்பட்டு, ஆயிரக்கணக்கான ஜனங்கள் முன்னிலையில் அவர் புதைக்கப்பட்டார். அவர் ஆறும் நாள் பூமியிலிருந்து வெளிப்படுத்தப்பட்டபோது, அவர் மலர்ந்த முகத்துடன் வெளிப்பட்டார் என ஒரு பத்திரிகைச் செய்தி கூறுகிறது.



## மதிப்புரை

### இராஜ தரங்கிணி (முதற்பகுதி)

[ஆசிரியர் : பண்டித சிரோமணி - வே. கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள்; வெளியிட்டோர் : எடுகேஷனல் பப்ளிஷிங் கம்பெனியார், நுங்கம்பாக்கம், சென்னை; விலை : பத்தணு.]

வடமொழியில் கல்ஹண கவியினுல் எழுதப்பட்ட இராஜ தரங்கிணி என்பது அரும்பெரும் நூலாகும். இதன் தமிழ்ச் சுருக்கம் இதுகாலை தமிழில் வெளிவந்திருத்தல் போற்றத் தக்கது. இதில் காஷ்மீரத்தை யாண்ட மன்னர்களின் சரித்திரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. சரித்திர ஆராய்ச்சி செய்வோர்க்கும், பொருந்திய உவமான உவமேயங்களை எடுத்தாளும் அழகை அநுபவிக்க விழைவோர்க்கும் இந்நூல் நற்பயனளிப்பதாகும். இந்நூலை வெளியிட்ட ஆசிரியர்க்குத் தமிழ் நாட்டார் நன்றி பாராட்ட வேண்டும்.

### நாலிரு நவீனக் களஞ்சியம் (முதற் பாகம்)

[இந்நூல் 'கலைமகள்' எழுதியது. காஞ்சீபுரம் தமிழ்நூற் பதிப்புக் கழகத்தினரால் வெளியிடப் பட்டது. விலை : பத்தணு.]

இதில் நான்கு கதைகள் அடங்கி யிருக்கின்றன. படிப்போர்க்குப் பல நல்லெண்ணங்களைத் தோற்றுவிக்கும் தன்மையில் இஃது எழுதப்பட்டிருப்பது பாராட்டத் தக்கது. இதனைத் தமிழ் நாட்டார் ஆதரிப்பாராக.

### பஞ்சாங்கங்கள்

யாழ்ப்பாணம் ஸ்ரீ சோ. வைத்தியநாத சாஸ்திரிகளால் கணிக்கப்பட்ட ஒரு பஞ்சாங்கம் கிடைக்கப் பெற்றோம். இதில் விரதாதி நிர்ணயம், வீடுகட்டல், மனைவகுத்தல் முதலியவைகள் சம்பந்தமான முறைகளும், ஆத்திகர்களுக்கு வேண்டிய பிறவும் அடங்கி யிருக்கின்றன. இதன் விலை 25 சதம். அதாவது நான்கு அணு. வேண்டுவோர்: ச. சோமசுந்திர ஐயர், கலாநிதி பிரஸ், பருத்தித்துறை, இலங்கை என்ற விலாசத்திற்கு எழுதவும்.

மற்ருெரு பஞ்சாங்கம் யாழ்ப்பாணம் கொக்குவில் ஸ்ரீமான் இரகுநாத ஐயர் அவர்கள் தத்த புத்திரர் ஸ்ரீ சிவராமலிங்க ஐயராலும், பௌத்திரர் ஸ்ரீ ச. பஞ்சாட்சர ஐயராலும் கணிக்கப்பெற்றது. இப்பஞ்சாங்கம் சுமார் எழுபத்து மூன்றூண்டுகளாகக் கணிக்கப்பட்டு வருவதொன்றே இதன் பெற்றியை நன்குவிளக்கும். அனைவருக்கும் பயன்படக் கூடிய பல விஷயங்கள் இதில் அடங்கி யிருக்கின்றன. இதன் விலை 25 சதம் (4 அணு). தபாற்கூலி வேறு.

### 'கூட்டுறவு'

இப்பெயர் வாய்ந்த மாதப் பத்திரிகையொன்று, சமீபத்தில் கோயமுத்தூரில் நிறுவப்பெற்ற தமிழ்நாடு கோவாபரேடிவ் பெடரேஷன் ஆதரவில் வெளியிடப்பட்டு வருகிறது. இதன் முதலிதழ் நமது பார்வைக்குக் கிடைத்துள்ளது. தேசத்தின் பொருளாதார அபிவிருத்திக்குக் கூட்டுறவு இயக்கம் வலுப்பட வேண்டிய தவசியமென்பதை நாம் கூற வேண்டுவதில்லை. ஆதலின், இப் பத்திரிகையைத் தமிழ் நாட்டார் ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

### நவமணி

இது, இராமநாதபுரம் ஜில்லா பள்ளத்தூரினின்று வெளியாகும் ஒரு மாத சஞ்சிகை. இதன் ஆசிரியர் திருவாளர் - சி. ரா. ம. இராமநாதன் அவர்கள். இதன் வருட சந்தா ஒரு ரூபா.

### ஆவாரம்பூ தூள்

பரமக்குடி போஸ்ட், வேங்கட குறிச்சியிலுள்ள இந்தியன் ஆவாரம்பூ காபி ஒர்க்ஸ், இராமசாமி மாணிக்கம் கம்பெனியிடமிருந்து ஒரு ரூபா எடையுள்ள ஆவாரம்பூ தூள் வரப்பெற்றோம். இதனை நாம் உபயோகித்துப் பார்த்து, மிகநன்று யிருக்கிறதென்று கூற மகிழ்ச்சி யடைகிறோம். காபி குடியின் தீமையை நன்குணர்வோர், அதற்குப் பதிலாக இதனை உபயோகித்தல் நலம். ஆவாரம் பூவின் விசேஷ குணத்தைப் பற்றி நாம் விரிவாகக் கூறவேண்டுவதில்லை. அரை பவுண்டு தூள் கொண்ட டின் ஒன்றின் விலை எட்டணு. வேண்டுவோர் மேற்கண்ட விலாசத்துக்கு எழுதிக்கொள்க.



## பிரமோதூத வருட பலன்கள்

| | | | |
|---|---|---|---|
| | ரவி புதன் சுக்கிரன் ராகு | குரு | |
| அங்காரகன் | இராசி | | லக்கினம் |
| | ஜெகத்ஜாதகம் | | |
| சனி | | சந்திரன் கேது | |

சுபஸ்ரீ விஜயாப்த கலியுக சகாப்தம் 5031 சாலிய வாகன சகாப்தம் 1852-ம் கூடி பிரமோதூத வருடம் சித்திரை மாதம் 1-ந்தேதி ஆதிவாரம் கிருஷ்ண பட்சம் பிரதமைத் திதியும் சித்திரா நட்சத்திரமுங் கொண்டு கடக லக்கினத்தில் இவ்வருடம் ஆரம்பமாகிறது.

வருடாரம்பத்தில் லக்கினதி பதியான சந்திரன் நான்கா மிடத்தில் மித்துரு க்ஷேத்திரத்தில் சுகஸ்தானாத்தானத்தி லிருந்தும் சேய்சனி குரு நீங்கலாயுள்ளவர்களின் திருஷ்டிபெற்றும் இருப்பதனுலும் இந்த சந்திரனே அரசனுயிருப்பதனுலும் இவ்வருடத்தில் அரசர்களுக்குப் பிரஜைகள் பேரில் நல்லபிப்பிராயம் உண்டாகும்; பிரஜைகளுக்கு அரசாங்கத்திடத்து அதிர்ப்தி ஏற்படும்.

இவ்வருடத்தில் எவ்விடத்திலும் சோராக்னி பயம் அதிகம் உண்டாகும். பெய்த இடத்திலேயே அதிக மழை மேலும் மேலும் பெய்யும். காலந்தவறிய மழை பெய்யும். அடிமைகளின் விரோதம் எஜமானுக்கு ஏற்படும். குடும்ப சம்பந்தமான விரோதமும் சகோதர ஒற்றுமைக் குறைவுகளும் உண்டாகும். மனைவி மக்களால் வீட்டின் எஜமானனுக்குச் சங்கடம் அதிகரிக்கும். அன்னிய தேசச் சரக்குகள் வியாபாரம் செய்வோருக்குலாப மிகுதியும், உள்நாடாகிய இந்தியாவில் ஏற்றுமதியாகும் சரக்குகள் விலை குறைவு படுதலும் அதனுல் உள் நாட்டில் உண்டாகும் எந்த வஸ்துவானுலும் அதனுல் வியாபாரம் செய்வோருக்கு அதிக லாப மில்லாமையும் சில சார்பாருக்கு நஷ்டமும் உண்டாம்.

ஈயம், பித்தளை, வெள்ளி, பொன் முதலிய உலோகங்களிலும், மாணிக்கம், முத்து, பச்சை, புஷ்பராகம், வைரம், கோமேதகம், வைடூரியம் முதலிய இரத்தினங்களிலும்வியாபாரம் செய்வோருக்கு லாபம் அதிகம் உண்டாம். விலையிற் சகாயங்களும் உண்டாம்.

தாம்பிரம், இரும்பு, பவளம், நீலம் இவைகளின் வியாபாரம் செய்வோருக்கு அதிக லாபமிராது; சில சார்பாருக்குப் பெருத்த நஷ்டமும் உண்டாகும். துவரை, எள்ளு இவைகளின் விளைவு குன்றும். அன்னம் காகம் முதலிய பட்சிகளுக்கு துர்ச்சம்பந்தமான பீடைகள் காட்டும். எவ்விடத்திலும் பருத்தி அதிகமானபலன் தாராது. தமிழ்ப் பாஷைக்கு அதிக சிலாக்கியம் உண்டாகும்.

இமாசலத்திலிருந்து கேகய தேயம் வரை மழைமிகுதியாயிருக்கும். மூடுபனியால் அதிக உபாதைகள் உண்டாகும். பிரஜைகள் அன்யோன்யம் குறையும். கேகய முதல் விந்தியகிரிவரை பிரஜைகள் விடாமுயற்சியும் அதனுல் உலகிற்கே பேருபகாராதிகளும் உண்டாகும். விந்தய முதற்கொண்டு கிருஷ்ணைவரையுள்ளார் எடுத்த காரியத்தைச் சாதிப்பவராகியும் விடாமுயற்சியுடையராயுமிருப்பர்.

கள் மிதமிஞ்சி நடமாடுதும் அன்னியரிடத்தில் அதிக நட்புக்கொண்டாடுதலும்சொந்தமானவரிடத்தில் விரோதம் காட்டுதலும் எவ்விடத்திலும் எக்காரியத்திலும் பரஸ்பரக் குறைவுகளும் உண்டாகும். சர்வகாரியங்களுக்கும் இடையூறுகள் உண்டாகும். சிங்கப்பூர், பினங்கு, சிலோன் முதலிய இடங்களில் அதிக மழை பெய்யும்; அதிக விஸ்வாசத்தினுல் லாபாதிகள் உண்டாகும். வெண்மை சம்பந்தமான வஸ்துவும் பால் சம்பந்தமான வஸ்துவும் அதிக பலன் தரும். கிருஷ்ணை முதல்கன்னியா குமரிவரை காலந்தவறிய மழையே உண்டாகும்.

இவ்வருடம் எத்தலத்தினும் புருடர்களை விட மேலாகிய நன்மைகள் பெண்களுக்கு உண்டாகும். தாழ்ந்த வகுப்பாருக்கு விசேஷித்த நன்மையுண்டாகும். ஷண்பகம்கருங்குவளை இப்புட்பங்கள் விளைவு குன்றும் எங்கும் தர்மந் தழைத்தோங்கும்.

கணிகையர், வியபசாரி முதலிய பெண்களுக்கு சோராதிதுஷ்ட சம்பந்தமான பீடிதங்களேகுதலும் உலகத்தின் உத்தமரென்றும் பெரியோரென்றும் பேர்படைத்தோர்களுக்குச் சகல விதமான சங்கடம் உண்டாகும். சமுத்திரயாத்திரிகர்களுக்குச் சாமான்ய இடையூறுகள் உண்டாகும். நெல், கோதுமை, கடலை, மொச்சை முதலியவை வடக்குத் தேசங்களில் விசேஷ பலனைத் தரும்.

அடுத்து வரும் சித்திரை மாதம் முதற்கொண்டு ஒவ்வோர் மாதப்பலன்களும் முன் மாதங்களிலேயே பிரசுரிக்கப்படும். கைத்தொழில், வியாபாரம் கிருஷிகள் முதலியன நன்கு பரிசீலனை செய்யப்பட்டு எழுதப்படும்.

அப்பாஜி ஜோஸ்யர்.

## சிந்துவில் முஸ்லீம் பீர் கைதியானுர்

சிந்துவில் பிரபலமானவரும், மூன்று லட்சம் பேருக்கு மதத்தலைவருமான பீர்பாக்ரோ என்பார் 26-3-30ல் கைது செய்யப்பட்டார். அவரைக் கைது செய்யப் போலீஸ் உத்தியோகஸ்தர்கள் 150 போலீஸ் சேவகர்களுடன் சென்றூர்கள். போலீஸாரைக் கண்டதும், பீர் மயக்கமுற்று 20 நிமிஷம் அப்படியே மூர்ச்சையற்று கிடந்தார். அவர் வீட்டைச் சோதனையிட்டதில் 40,000 தோட்டாக்கள், இரண்டு ரிவால்வர்கள், 25 சுழல்துப்பாக்கிகள் ஏராளமான அபினி, மதுபானவகைமுதலியவைகள் அகப்பட்டன. ஒரு பெரிய பெட்டியில் 23 வயதுடைய இப்ராஹீம் கோரி என்பார் அடைக்கப்பட்டிருந்தார். இவ்விளைஞருடைய தாயார் தம் மகன் சில மாதங்களாகக் காணப்படவில்லையென்று சுக்கூர் ஜில்லா மாஜிஸ்திரேட் கோர்ட்டில் பிராது கொடுத்திருந்தார். சுக்கூர் மாஜிஸ்திரேட் புலன்விசாரித்தறிய பீரை வழுநான் காவலில் வைக்கும்படி உத்தரவிட்டார். பீர் பாக்ரோ மீது கொலை, களவு, கன்னம் வைத்தல் முதலிய குற்றங்கள் சாட்டப்பட்டிருக்கின்றன.

## சீத்தாநகரம் தொண்டர்படையின் புறப்பாடு

31-3-30 மாலை 5-மணிக்குக் கிழக்குகோதாவரி ஜில்லாவில் பிரயாணஞ் செய்ய சீத்தாநகர ஆசிரமத்திலிருந்து ஸ்ரீ புலுசு சாம்பமூர்த்தியின் தலைமையில் 58 தொண்டர்களடங்கிய ஒரு படை புறப்பட்டு விட்டது. வழிநெடுக கிராமவாசிகள் தலைவரையும், தொண்டர்களையும் மேளதாளத் துடனும், கர்பூர ஹாரத்தியுடனும் வரவேற்றூர்கள். ஸ்ரீ சாம்பமூர்த்தி வழியில்கூடிய ஒருபொதுக் கூட்டத்தில், சட்ட மறப்பு இயக்கத்தின் அவசியத்தைப்பற்றிப் பேசுகையில், எல்லோரும் தொண்டராக வேண்டுமென்று வலியுறுத்தினர். அன்றிரவு இராஜம்பேட்டையில் தங்கினர்கள். பின்னர் 1-4-30 காலை 9-மணிக்கு இராஜம் பேட்டையிலிருந்து காட்டேரு என்னுமிடத்திற்கு வந்து சேர்ந்தனர். வழியில் ஜனங்கள் வெகு உற்சாகத்துடன் தொண்டர்களாகச் சேர்ந்து வருகிறூர்கள்.

## ஜப்பான்

29-3-30-ல் ஜப்பானிலுள்ள டோக்கியாவில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில், மகாத்மா காந்தியை ஆதரிக்கவேண்டுமென்று உற்சாகத்துடனும், ஏகமனதுடனும் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

## நாடெங்கணும் சத்தியாக்கிரக முயற்சி

### கட்டாக்

கட்டாக்கில் சட்டமறுப்புக் கூட்டங்களில் பேசக் கூடாதென்றும் சத்தியாக்கிரகத் தொண்டர்களைச் சேர்க்கக் கூடாதென்றும் பிறப்பிக்கப்பட்ட 144-வது தடையுத்தரவை மீறியதற்காக ஸ்ரீமான்கள் கோபபந்து சௌத்ரீ, பூர்ணசந்திர போஸ் இவர்கள்மீது 188-வது பிரிவுப்படி 'சம்மன்' பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீமதிகள் சாரளாதேவி, மாலதிதேவி இவர்கள்உள்ளிட்ட பலதொண்டர்கள் சேர்க்கப் பட்டார்கள்.

### ஹூப்ளி

27-3-30 ல் ஹூப்ளியில் கூடிய ஒரு பெரிய பொதுக்கூட்டத்தில் டாக்டர் ஹார்டிகர், அடிகளின் பிரயாணத்தின் கருத்தையும், காட்சிகளையும், விசேஷங்களையும் எடுத்துக் கூறிய பின்னர் கருநாடகத்தில் உடனே சாத்வீக சட்டமறுப்புப் போர் ஆரம்பிக்க வேண்டு மென்றும், தொன்று தொட்டு சரித்திரத்தில் பேர்பெற்ற இந்நாடு இவ்வியக்கத்தை ஏற்றுக்கொள்ளு மென்று நம்புவதாகவும், மாணவர்கள் இதில்சேரவேண்டுமென்றும் உபந்நியசித்தார்.

### சென்னை

27-3-30-ல் சென்னைத் திருவல்லிக்கேணி திலகர் கட்டத்தில் ஒரு பொதுக் கூட்டம் ஸ்ரீமான் இராஜ கோபாலாச்சாரியாரின் தலைமையில் நடைபெற்றது. அது போது ஸ்ரீமான் புலுசு சாம்ப மூர்த்தி, பாவிபர்களின் மனம் கசிந்துருகும்படி பிரசங்கம் செய்கையில், ஒரு மகாத்மா நமக்குத் தலைவராக விளங்குகையில் என் தயங்க வேண்டுமென்றும், இந்தக் கூட்டத்தில் எத்தனை பேர் இந்தச் சட்டமறுப்புப் போரில், சேரத்தயாரா யிருக்கிறூர்களென்றும் கேட்டார். அப்போது அங்கிருந்த சிலர் கைதூக்கினர்கள். முடிவில் ஸ்ரீ சாம்பமூர்த்தி இனி உறங்கக்கூடாதென்றும், இதுவேமுடிவான போராட்டமென்றும், தமிழ் நாட்டில் ஸ்ரீமான் இராஜ கோபாலாச்சாரியாரின் ஆணைப்படி நடக்க வேண்டுமென்றும் கூறினர். பிறகு ஸ்ரீமான் இராஜகோபாலாச்சாரியார் பேசுகையில் இனி வெறும் பேச்சில்பயனில்லை யென்றும், உப்புச் சத்தியாக்கிரகம் பொதுவானதென்றும், எனவே எல்லோரும் தொண்டராகச் சேர்ந்து சத்தியாக்கிரகத்தை நடத்தித் தமிழ் நாட்டிற்கு நல்ல பெயர் உண்டாக்க வேண்டுமென்றும் கூறினர். கூட்டத்தின் முடிவில் சிலர் தொண்டர்களாகப் பதிவு செய்ய முன் வந்தவர்களை ஹிந்தி பிரசார காரியாலயத்தில் பதிவு செய்து கொள்ளும்படி கூறினர்.

### போலீஸ் ஏற்பாடுகள் -

மகாத்மா காந்தியும் அவருடைய திருக்கூட்டத்தாரும் வருவதை முன்னிட்டு ஜலால்பூரில் ஏராளமாகப் போலீஸ் படைகள் கொண்டுவந்து சேர்க்கப்படுகின்றன வென்றும், உதவி கலெக்டர் ஸ்ரீ ஜுவலும் டிட்டி கலெக்டர் ஸ்ரீ அல்மேயாவும் அங்கு முகாம் செய்திருக்கிறூர்களென்றும் தெரிய வருகின்றன. இன்னும் போலீஸ் சூப்பரின்டெண்டெண்ட், சூரத் கலெக்டர் இவர்கள் தினந்தோறும் ஜலால்பூருக்கு வந்து போய்க்கொண்டிருக்கின்றனராம். தண்டியில் சமுத்திரக் கரையோரமாக ஒரு போலீஸ் படை காவலாக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது.



## இந்தியா சட்டசபை

### பண்டித மாளவியா முதலியோரின் வெளியேற்றம்

31-3-30ல் கூடிய இந்தியா சட்டசபைக் கூட்டத்தில் பருத்திக் காப்பு வரி மசோதாவைப்பற்றி பலமான வாதம் நடைபெற்றது. பண்டித மாளவியா, ஸ்ரீமான் பி. நாஸ் முதலியோர் கொண்டுவந்த திருத்தப் பிரேரணைகள் தோல்வியடைந்தன. மசோதா மூன்றுவது முறை படிக்கப்பட வேண்டுமென்ற பிரேரணை கொண்டு வரப்பட்ட பிறகு பண்டித மாளவியா பின் வருமாறு பேசினர்:—

நான் மசோதாவைக் கடைசி முறையாக எதிர்க்கிறேன். வாதங்கள் தீர்ந்து விட்டன. தற்பொழுது வாதம் செய்வதில் பிரயோசனமில்லை 24 வருஷகாலமாக நான் சட்டசபை அங்கத்தினராக இருந்து வருகின்றேன். இந்த மசோதா விஷயத்தில் அரசாங்கத்தார் நியாயமற்ற மனுேபாவங் கொண்டதைப்போல் நான் எப்பொழுதும் பார்த்ததில்லை. அரசாங்கத்தார் வரிவிதிக்கும் சுதந்தரத்தையும் அக்கிராசனரது யோசனையையும் அவமதிக்க எவ்வளவு தூரம் செல்லக்கூடுமோ அவ்வளவு தூரம் சென்று விட்டனர். இனி இச்சபையில் எனது கட்சியார் இருப்பது எவ்விதத்திலும் பிரயோசனமாக இருக்குமென்று நான் நினைக்கவில்லை. சபைக்குள் இருந்தால் இந்த மசோதாவை நிறைவேற்றுவதற்கு அரசாங்கத்தாருக்கு உதவியவராவோம். உத்தியோகஸ்தர்களுடைய 26 வாக்குகளை எடுத்துவிட்டால் பெரும் பான்மையோர் சிறு பான்மையோராகி விடுவார்கள். இந்த முறையில் பார்க்குமிடத்துக்கு நாங்கள் இன்று இச்சபையில் தோற்ற போதிலும் உண்மையில் வெற்றி எங்களுடையதே யாகும். மசோதா சுயேச்சையான வாக்குகளைக் கொண்டு நிறைவேற்றப்படவில்லை என்பதை தேசத்தார் அறிவார்கள்.

இதன் பிறகு பண்டித மாளவியா வெளியேற அவரது கட்சி அங்கத்தினர்களும் சபையினின்று வெளியேறினர்கள்.

## ஆண்டு விழா

(ஒரு நிருபர்)

சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் 24, 25-ம் ஆண்டு நிறைவு விழா சுக்கில ஆண்டு, பங்குனித் திங்கள் 22, 23, 24 (1930ஹூ ஏப்ரல்மீ" 4, 5, 6)-ம் நாட்களில் மேற்படி பேட்டை மோபிரீஸ் இராஜ வீதியிலுள்ள "ஞானந்த நிலைய"த் தில் கொண்டாடப் பெறும்.

முதல் நாள் (4-4-30) வெள்ளிக்கிழமை பிற்பகல் 3 மணி முதல் மாலை 6 மணி வரை பண்டிதை ஸ்ரீமதி எஸ். கிருஷ்ணவேணி அம்மாள் அவர்கள் தலைமையில் ஸ்ரீமதிகள் P. செண்பகம் அம்மாளும், M. அலமேலம்மாளும், T. பத்மலோசனி அம்மாளும் பேசுவார்கள்.

இரண்டாம் நாள் (5-4-30) சனிக்கிழமை மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரை திருவாளர் E. N. தணிகாசல முதலியார் அவர்கள் பி. ஏ., பி. எல். தலைமையில், திரிசிரபுரம் திரு. மு. கோவிந்தராய நாட்டார் அவர்கள் பி. ஏ., எல். டி. "திருவாசகம்" என்பது பற்றியும், காஞ்சிபுரம் திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்கள் பி. ஏ. "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என்பது பற்றியும் பேசுவார்கள்.

மூன்றும்நாள் (6-4-30) ஞாயிற்றுக்கிழமை காலை 7 மணி முதல் 10 மணி வரை சைதாப்பேட்டைத் திருப்புகழ் சபையாரும், திருப்புகழ் விருத்தியுரை ஆசிரியர் பிரம்மஸ்ரீ பி. எஸ். சுப்பிரமணிய அய்யர் எம். ஏ., அவர்களும் இன்னிசைக் கருவிகளுடன் திருப்புகழ் ஓதுவார்கள். பிற்பகல் 3 மணி முதல் இரவு 8 மணி வரை திருவாளர் ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் பி. ஏ., பி. எல்., எம்.எல்.சி. தலைமையில் ஸ்ரீ இராமகிருஷ்ண மாணவர் நிலையம் பிரம்மஸ்ரீ க. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் பி.ஏ.,எல்.டி. "தரும ஸம்ஸ்வயம்" எனும் பொருள் பற்றியும், பண்டிதை ஸ்ரீமதி என். கிருஷ்ணவேணி அம்மாள் அவர்கள் "கற்றணை" என்பது பற்றியும். திருவாளர் தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் எம். ஏ., பி. எல். "அற்புதத் திருவந்தாதி" என்பது பற்றியும், திருப்புகழ் விருத்தியுரை ஆசிரியர் பிரம்மஸ்ரீ பி. எஸ். சுப்பிரமணிய அய்யர் அவர்கள் எம். ஏ. "கந்தரலங்காரம்—கந்தரனுபூதி" என்பது பற்றியும் பேசுவார்கள்.

பிரபல காங்கிரஸ் தலைவரான ஸ்ரீமான் மணிலால் கோதாரியின் மனைவியாரான ஸ்ரீமதி மணிபென் கோதாரி 30-3-30 இரவு ஜோரவார் நகரில் மரணமடைந்தார்.

27-3-30 மாலை வந்தவாசி தாலுக்கா குழப்ப லூரில் 17 வயதுள்ள ஒரு சிறுவன் தலையில், இடி விழுந்ததனால், உடனே மரண மடைந் தான்.

o o o

அலிகார் முஸ்லீம் சர்வகலா சாலைக்கு நைஜாம் மன்னர் பத்து லட்சம் ரூபா நன் கொடை கொடுத்திருப்பதாக ஒரு செய்தி கூறுகிறது.

o o o

திருவாங்கூர் மகாராஜா அரசாங்க நிரு வாகப் பயிற்சி பெறுவதற்கு ஏப்ரல் மத்தி யில் பெங்களூருக்கு வருவாரென்று எதிர் பார்க்கப்படுகிறது.

o o o

15, 16-4-30க் தேதிகளில் ரெய்ப்பூரில் நடைபெறப் போகும் மத்திய மாகாண அரசி யல் மகாநாட்டிற்குத் தலைமைவகிக்கப் பண் டித ஜவஹரிலால் இசைந்துள்ளார்.

o o o

எகிப்து மந்திரியான ஸ்ரீ நஹாஸ் பாட்சா வும் மற்றும் அவருடைய கூட்டத்தாரும் 26-3-30 லண்டன் வந்தடைந்தனர். இவர் கள் சிறப்பாக வரவேற்கப்பட்டார்கள்.

o o o

30-3-30 இரவு இரங்கூன் ஹைக்கோர்ட் நீதிபதி பி. என். சாரி தம் 60-ம் ஆண்டில் இரங்கூனில் மரணமடைந்தார். இவர் சிறிது காலமாக அசௌக்கியமாக் விருந்தார்.

o o o

30-3-30 காலை நெல்லூர் நகரசபை தோட் டிகள் முன் எச்சரிக்கை ஒன்றும் செய்யா மலே, சம்பளம் போதவில்லையென்று கூறிக் கொண்டு வேலை நிறுத்தஞ் செய்துவிட்டார் கள்.

o o o

31-3-30-ல் கூடிய செங்கற்பட்டு ஜில்லா போர்டுதலைவர் தேர்தல்கூட்டத்தில் திவான் பகதூர் எம். கே. ரெட்டியாரவர்கள் மூன்றும் முறையாகப் போட்டியின்றித் தேர்ந்தெடுக் கப்பட்டார்.

o o o

மல்லாயன் என்னும் ஊரில் 19-3-30-ல் நெருப்புப்பற்றிச் சுமார் 250 வீடுகள் நாச மடைந்தன. ஐந்து லட்ச ரூபாய்க்குச் சேத மேற்பட்டிருக்குமென்று ஒரு நிருபர் தெரி விக்கிறார்.

o o o

டாக்டர் ரவீந்திரநாத தாகூர் 26-3-30ல் மார்செயில்ஸ் வந்துசேர்ந்தார். மே மாதத் தில் பாரிஸ் செல்வார். ஜூன் மாதத்தில் பாரிஸிலிருந்து லண்டன் சென்று பிரசங் கம் செய்வார்.

o o o

27-3-30-ல் லாகூர் அப்பாரிசேட்டிலுள்ள சாக்கடையை முனிஸிபல் ஊழியர்கள் சுத் தஞ் செய்து கொண்டிருந்த போது, துப் பாக்கி ரவைகளடங்கிய இரு மூட்டைகள் கண்டெடுக்கப்பட்டன.

o o o

ராய்பெரில்லிசிறையில் தற்போதுஉண்ணு விரத மிருக்கும் காங்கிரஸ் கைதிகளை 'பி' வகுப்புக்கைதிகளாக நடத்தும்படி 28-3-30ல் ஐக்கிய மாகாண அரசாங்கத்தார் உத்தரவு பிறப்பித்திருப்பதாகத் தெரிகிறது.

o o o

அலிகார் நீதிபதி கோர்ட்டில் 28-3-30-ல் காவலின் பணப் பெட்டியி லிருந்து ரூ. 36,000 காணமற்போய்விட்டது. அப்பெட்டி உடைக்கப்பட்டிருந்தது. போலீஸார் புலன் விசாரித்து வருகின்றனர்.

o o o

சைமன் கமிஷன் அறிக்கை ஏப்ரல் மாத முடிவுக்குள் வெளியாகுமென்று தக்க இடத் திலிருந்து செய்தி கிடைத்திருப்பதாக "இங்கிலீஷ் மன்" பத்திரிகையில் அதன் லண்டன் நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

பஞ்சாப் மாகாண முழுவதிலும் 1922-ம் வருஷத்திய போலீஸ் சட்ட (தூண்டுதல் முதல் துவேஷம் வரையிலுமுள்ள அம்சங்க ளடங்கிய சட்டம்)த்தைச் சபையோடுகூடிய கவர்னர் பிரயோகம் செய்திருக்கிறார்.

o o o

ஓய்வில் ஐரோப்பா சென்றிருந்த மத்திய மாகாண கவர்னரான சர். மாண்டேகு பட் லர் 29-3-30 காலை நாகப்பூர் வந்து சேர்ந்தார். பிறகு ஸ்ரீ தாம்பேவிடமிருந்து கவர்னர் ஸ்தானத்தைப் பெற்றுக்கொண்டார்.

o o o

சென்னை லயோலா காலேஜ் தமிழ்ப் போதகாசிரியரும் "திராவிடன்" பத்திரி கையின் மாஜிஆசிரியருமான ஸ்ரீமான் பக்த வத்ஸலம் பிள்ளை 20-3-30-ல் புரசவாக்கத் தில் தமதில்லத்தில் மரணமடைந்தார்.

o o o

பிஜித்தீவிலிருந்து 642 இந்தியத் தொழி லாளர்களை ஏற்றிக் கொண்டு 'சட்லெஜ்' என்னும் கப்பல் 11-4-30-ல் கல்கத்தா வந்து சேருமென்றும்இவர்களில் 306பேர்சென்னை வாசிகளென்றும் ஒரு செய்தி கூறுகிறது.

o o o

சென்ற வாரம் சக்கிலி வகுப்பைச் சேர்ந்த ஒருவர் பெரும் பான்மையான வாக்குகளால் ஆஸாம் சட்டசபைக்கு அங்கத்தினராகத் தேர்ந் தெடுக்கப்பட்டிருக்கிறார். அவருக்கு எதிராக நின்ற ஒரு வக்கீல் தோல்வியடைந் தார்.

o o o

மாதத்திற்கு 12 ரூபாவாகவும், இருநூறு முறைகூப்பிடுதலுக்கு ஒரு முறைக்கு ஓணு

# கலம்பகம்

விகிதமும், இருநூறுக்கு மேற்பட்டு ஒரு முறைக்குப் பத்து பை விகிதமும் சென்னை யில் டெலிபோன் கட்டணம் குறைக்கப்பட் டுள்ளது.

o o o

தரைப்படைக்கு 40,5,000,000 பவுனும், கடற்படைக்கு 5,17,39000 பவுனும், விமா னப் படைக்கு 17,850,000 பவுனும் இவ் வாண்டுச்செலவெனப்பிரிட்டிஷ் பொக்கிஷ மந்திரி லண்டன் காமன்ஸ்சபையில் அறிவித் துள்ளார்.

o o o

சென்றவாரத்தில், 371 அடி நீளமுடைய தும், 2760 டன் கனமுடையதும் இருமாடி கள்கொண்டதும் 80 பேரும்8 உத்தியோகஸ் தர்களும் கொள்ளத்தக்கதுமான ஒரு பெரிய அமெரிக்க நீர்மூழ்கிக் சப்பல் கடலில் விடப் பட்டது.

o o o

ஸ்ரீமதி கே. சி. தே. என்பார் கல்கத்தா நகர சபை அங்கத்தினராக நியமிக்கப்பட்டுள் ளார். கல்கத்தா நகர சபையில் இந்திய மாதொருவர் அங்கத்தினராக நியமிக்கப்பட் டது இதுவே முதன் முறை யெனத் தெரியவருகிறது.

o o o

பம்பாயில் ஸ்ரீமான் பி. ஜி. ஹார்னிமன் இன்ஸால்வெண்ட் கொடுத்து விட்டார். அவ ருடைய மொத்தக் கடன் முப்பதினாயிரம் ரூபாவாகும். அவர் பம்பாய் அபிவிருத்தி டிரஸ்டில் வகித்திருந்த பதவிகளை ராஜினமா செய்து விட்டார்.

o o o

கோபிதாலுக்கா போர்டு கலைக்கப்பட்டு விட்டதாயும், புதுத் தேர்தல் நடைபெற்றுப் புதுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படும்வரைஇத் தாலுக்கா போர்டின் நிருவாகம் ஓர் அரசாங்க உத்தியோகஸ்தர் ஆட்சியிலிருக்கு மென்றும் ஒரு பத்திரிகை நிருபர் அறிவிக்கிறார்.

o o o

தஞ்சைஜில்லாபோர்டு தலைவரான ஸ்ரீ மான் ஏ. டி. பன்னீர் செல்வம் தேர்ந் தெடுக்கப் பட்டிருப்பதாக அரசாங்கத்தார் வெளியிட்ட அறிக்கையில் காணப்படுகிறது. தேர்தல் தகராறு சிவில்கோர்ட் முடிவுக்கு விடப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது.

o o o

மைசூரில் எஸ்.எஸ்.எல். ஸி. பரீட்சையில் இரண்டாவது மொழியாக ஹிந்தியைச் சேர்த் துக் கொள்ள வேண்டுமென்று பரீட்சை போர்டு சிபார்சு செய்திருந்ததை அரசாங்கம் ஏற்றுக் கொண்டு 1930-ம் ஆண்டிலிருந்து அந்த சிபார்சு அமுலில் வர உத்தரவு பிறப் பித்தது.

o o o

கல்கத்தாவில் பதினறு வண்டிக்காரர்கள் பாதையைத் தடை செய்ததற்காக ஒரு ரூபாயிலிருந்து ஐந்து ரூபாவரை அபராதம் விதிக்கப்பட்டனர். எதிரிகள் அபராதத்தைக் கொடுக்க மறுத்து "மகாத்மா காந்திக்கு ஜே!" என்று ஆரவாரஞ் செய்துகொண்டு சிறை சென்றார்கள்.

o o o

சென்னை இராயப்பேட்டை இந்தியஊழி யச் சங்கமண்டபத்தில் சாரதா சட்டத்தி லுள் விவாக வயதைக் குறைக்கக் கூடா தென்று இராஜப்பிரதிநிதிக்கு அறிவிக்க 23-3-30ல் ஒரு பொதுக்கூட்டம் திவான் பகதூர் ஸி. வி. விஸ்வநாத சாஸ்திரியார் தலைமையில் நடைபெற்றது.

o o o

தென்னுப்பிரிக்காவிலுள்ள டர்பன் சாஸ் திரி கலா சாலையில் வேலை செய்வதற்கு இந் திய அரசாங்கத்தாரால் தேர்ந்தெடுக்கப்பட் டிருக்கும் ஆறு இந்திய உபாத்தியாயர் களுக்கு 25-3-30-ல் பம்பாய் இந்தியஊழியச் சங்கக் காரியாலயத்தில் கனம் வி. எஸ். ஸ்ரீ நிவாச சாஸ்திரிகள் தேக் கச்சேரி நடத்தி னர்.

o o o

2-4-30 முதல் திரிசிராப்பள்ளி மானு மதுரையில் பாதையின் புதுக்கோட்டை - காரைக்குடி பிரிவு, சாமான்கள் போக்கு வரத்துக்காகத் திறக்கப்படுமென்றும், பிர யாணிகள் போக்குவரத்துக்குத் திறக்கப்படும் நாள் பின்னர் அறிவிக்கப்படு மென்றும் ரெயில்வே கம்பெனியார் தெரிவித்திருக்கின் றனர்.

o o o

ஐந்து வல்லரசு கப்பற்படை மகாநாட் டைப்பற்றித் தம் அபிப்பிராயத்தைத் தெரி விக்கையில், சமாதானம் நிலவுதற்குக் கப்பற் படை ஒழிவது இன்றியமையாததாயின் உலகத்திலுள்ள போர்க் கப்பல்களெல்லா வற்றையும் வாங்கி மோட்டார்களாக மாற்றி விடுவேன் என்று ஸ்ரீ ஹென்றிபோர்ட் கூறினராம்.

o o o

சென்ற வாரம் நடைபெற்ற ஐக்கிய மாகாண சட்டசபையில், ஆஸ்பத்திரிகளின் இன்ஸ்பெக்டர் ஜனரல் இந்தியராகவே இருக்க வேண்டுமென்று கொண்டு வரப் பட்ட தீர்மானம் ஏகமனதாக நிறைவேறி யது. ஆனல் சட்டப்பிரகாரம் அவர் ஐ. எம் எஸ் பரீட்சையில் தேறியவராகவிருக்க வேண்டுமென்று மந்திரியார் வாதித்தார்.

o o o

1930ஹு ஏப்ரல் மாதம் 5, 6 சனி, ஞாயிறுகளில் தூத்துக்குடி கீழவூர் கோபாலசாமி நாயக்கர் தெருவில் அமைக்கப் பெற்றிருக்கும் பந்தலில் தூத்துக் குடி தாலுகா இரண்டாவது அரசியல் மகா நாடு, ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராஜகோபா லாச்சாரியார் அவர்கள் தலைமையின்கீழ்நடை பெறும் என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

o o o

கலைக்கப்பட்ட ஜெர்மனி மந்திரிசபையை 29-3-30 ல் மத்தியகட்சித் தலைவரான ஸ்ரீ ஹெர்பிருனிங் அமைத்திருக்கிறார். இதில் டாக்டர் கர்டியர் அந்நியநாட்டு மந்திரியாக வும், டாக்டர் விர்த் உள்நாட்டு மந்திரியாக வும், டாக்டர் மோல்டன் ஹார் பொக்கிஷ மந்திரியாகவும், ஜெனரல் கிரீனர் யுத்த மந் திரியாகவும் நியமிக்கப்பட் டிருக்கின்றனர்.

o o o

கல்கத்தா தாக்கர் ஸ்பிங் கம்பெனியின் அச்சுக்கூட இலாகாவைச் சேர்ந்த தொழி லாளர்களனைவரும் 26-3-30-ல் வேலை நிறுத் தஞ் செய்து விட்டார்கள். தொழிலாளர் கொடுமையாக நடத்தப் படுகின்றார்களென் றும், ஒரு தொழிலாளி தம் தகப்பனார் மரணத்திற்காகவிடுமுறை கேட்டதற்கு மறுக் கப்பட்ட தென்றும் இவைகளே வேலை நிறுத் தத்திற்குக் காரணங்களென்றும் கூறப்படு கின்றன.

o o o

திண்டுக்கல் சர்வசன சீவகாருணிய சங்கத் தின் சார்பான கூட்டம் 25-3-30 கோட்டை மாரியம்மன் கோயிலுக்குச் சமீபமாக நாவ லூற்று திரு-சுவாமி சிவநேசம் அவர்கள் தலை மையின்கீழ், "சாமி பலி கேட்கவில்லை" "அன்பே ஆண்டவன்" என்னும் பொருள் கள்பற்றி முறையே நாகல்நகர் திரு. வாலையா னந்தம் அவர்களும், அமிர்தகவி திரு. காளி தாசன் அவர்களும் பேசினர்கள் என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

ஹக்தவாடி ஜில்லா ஆதி திராவிடர் மகா நாடு பிரமோதூத வருஷம் சித்திரை மாதம் 4, 5உ புதன் வியாழக் கிழமைகளில் (16, 17-4-1930) கையானில் நடைபெறும். திரு. சாமி சோமசுந்தரம் அவர்கள் மகாநாட் டைத் திறந்து வைக்கவும் பாகநேரி திரு. ஆர். வி. சாமிநாதன் அவர்கள் மகாநாட்டுத் தலைமை வகிக்கவும் இசைந்துள்ளார்கள் எனக் காரியதரிசிகள் தெரிவிக்கிறார்கள.

o o o

கல்கத்தாவில் ஓர் இந்து விதவை தன் புகைப்படத்தை 1927-28-ம் வருடத்திய ரெயில் கைடில் தம் அநுமதியின்றிப் பிர சுரித்ததற்காகக் கிழக்கிந்திய ரெயில்வேமீது பத்தாயிரம் ரூபாவுக்கு மான நஷ்டவழக் கொன்று தொடுத்திருந்தது நேயர்கள் அறிந் ததே. இவ்வழக்கை விசாரித்த நீதிபதி அப் படம் மானபங்கம் விளைவிக்கக் கூடியதல்ல வென்று கூறி 27-3-30-ல் வழக்கைத் தள்ளி விட்டார்.

o o o

சென்றவாரம் கல்கத்தாவில் ஓர் ஆசிரமத் தில் பன்னிரண்டு பேர் நுழைந்து, தூங்கிக் கொண்டிருந்த ஒரு சாதுவைக் கட்டிப்போட் டனர். பின்னர் அவர்மீது கிரோஸின் எண் ணெயை ஊற்றிக் கொளுத்தி விட்டுச் சாமான்களைத் திருடிக்கொண்டு ஓடிப்போய் விட்டனர். சாதுவின் கூச்சலைக் கேட்டுப் பக்கத்து வீடுகளி லிருந்தவர்கள் ஆசிரமத்திற் குள் வந்து தீயை அணைத்தார்கள். சாதுவின் தேகம் இரணமாக விருக்கிறது.

o o o

நாகபுரி சர்வகலாசாலையின் உப அத்தியட் சகரின் மனைவியாரான ஸ்ரீமதி ஜே. எப். மெக்பாடியன், ஸ்ரீமதிகள் ஜே. கே. ஆர். காமர், ரிடையர்ட் ஐ. எம். எஸ். கர்னல் கே. வி. குக்காபயின் புதல்வியான ஸ்ரீமதி சமதிபாய் தியோ ஆகிய மூவரையும் நாகபுரி நகரின் கௌரவ மாஜிஸ்திரேட்களாக மத் திய மாகாண கவர்னர் நியமித்தார். இம் மாகாணத்தில் மாதர்களை மாஜிஸ்திரேட்டுக ளாக நியமிப்பது இதுதான் முதல் முறை.

o o o

கல்கத்தா அடிஷனல் மாகாண மாஜிஸ் திரேட் கோர்ட்டில் சென்ற ஜனவரி மாதத் தில் கலகம் செய்ததாகக் குற்றஞ்சாட்டப் பட்ட நான்கு கிராமத்து வாலிபர்கட்கு 27-3-30ல் அபராதம் விதிக்கப்பட்டது. எதிரிகள் அபராதம் கொடுக்கமறுத்து வெளி யே ஒரு நாட்டுப்புறத்து வாலிபர் எழுப்பிய வந்தேமாதரக் கூச்சலில் கலந்துகொண்ட னர். இதனல் கொஞ்ச நேரம் கோர்ட்டு நடைபெறவில்லையாம். பிறகு எதிரிகளுக்கு நான்கு நாள் வெறுங்காவல் தண்டனை விதிக் கப்பட்டது.

# மணித்திரள்

மான்செஸ்டர் நகர ரெயில்வே பிளாட்பா ரம் 2238 அடி நீளமுள்ளதாம்.

* * *

1788-ம் வருஷத்தில் ஆஸ்திரேலியாவில் ஐந்தே ஐந்து குதிரைகள் மட்டும் இருந்தன வாம்.

* * *

கிரேட் பிரிட்டனில் மட்டும் வருஷத்தில் 60 லக்ஷம் முட்டைகள் செலவாகின்றன வாம்.

* * *

பருத்தியிலிருந்து மரச் சாமான்கள் செய் யக்கூடிய ஒரு முறையை ஓர் அறிஞர் கண்டு பிடித்திருக்கிறார்.

* * *

வாரிசில்லாத சொத்துக்கள் மட்டும், பிரிட் டிஷ் அரசாங்கத்தினிடத்தில் 40 லக்ஷம் பவு னுக்கிருக்கிறதாம்.

* * *

சூரிய வெளிச்சத்தைக் கொண்டு, இரும் பை உருக்கும் முறையை ஓரறிஞர் கண்டு பிடித் திருக்கிறார்.

* * *

தற்போதைய காமன்ஸ் சபை அங்கத்தி னர்களின் சராசரி வயது 50 என்று நிர்ண யிக்கப்பட் டிருக்கிறது.

* * *

பர்லின் நகரத்தில் குருடர்களுக்கென்றும், செவிடர்களுக்கென்றும், ஒரு ஹோட்டல் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

* * *

இங்கிலாந்திலுள்ள ஒரு ரயில்வே கம்பெ னியின் கால அட்டவணையை அச்சடிப்ப தற்கு 52 டன் காகிதம் செலவாகிறதாம்.

* * *

இங்கிலாந்தில் 1929-ம் ஆண்டில் 147831767 பவுண்டு நிறையுள்ள புகையிலை, சிகரெட்டுகளுக்காக மட்டும் செலவழிக்கப் பட்டனவாம்.

* * *

புடாபெஸ்ட் நகரத்தில் ஒருவன் தன் ஆயுள் முழுவதும் சாப்பாடு போட வேண்டு மென்ற ஒரு நிபந்தனையுடன் தன் வீட்டை விற்று விட்டான்.

* * *

காற்றிலிருந்தே செயற்கைப்பட்டு, வெடி மருந்துகள் முதலியன உற்பத்தி செய்ய முடியுமென்று ஒரு ரஸாயனசாஸ்திரி கண்டு பிடித் திருக்கிறார்.

* * *

இயற்கைப் பல்லுக்குப் பதிலாகச் செயற் கைப் பல்லை உபயோகித்துக் கொள்ளலா மென்று 1593-ம் வருஷத்தில் ஒரு ஜர்மா னிய டாக்டர் கண்டுபிடித்தார்.

* * *

ஐரிஷ்பாஷையை ஐயர்லாந்து முழுவ தும் பரப்ப, சென்ற எட்டு வருஷங்களில் ஐரிஷ் அரசாங்கத்தார் 2½ லக்ஷம் பவுன் செலவழித்திருக்கின்றனர்.

* * *

ஆகாய விமானத்திலிருந்து கொண்டு 63,000 சதுர மைல் விஸ்தீரணத்திற்குட் பட்ட எல்லாப் பொருள்களையும் புகைப்பட மெடுக்க ஒரு கருவி கண்டு பிடிக்கப்பட்டிருக் கிறது.

* * *

இங்கிலாந்தில் ஒரு பெரிய ரெயில் வாகன் கட்டப்பட் டிருக்கிறது. இதன் நிறை 220 டன். இதற்கு 56 சக்கரங்கள் உண்டு. இது 150டன் நிறையுள்ள சாமான் களை ஏற்றிச்செல்லும்.

* * *

இங்கிலாந்தில் ஒரு பிரெஞ்சுக்காரன், தன் பெற்றோரின் சம்மதமின்றி ஓர் ஆங்கிலேய ஸ்திரீயை மணந்து கொண்டால், அந்த விவாகம் இங்கிலாந்தில் செல்லுபடி யாகுமே தவிர, பிரான்சில் செல்லுபடியாகாது.

* * *

இங்கிலாந்தில், உடைகளைச் சீர்திருத்தம் செய்வதற்கென்று ஒரு சங்கம் ஸ்தாபிக்கப் பட் டிருக்கிறது. நிஜார், ஷர்ட், காலர், டை முதலியவைகள் கண்டிக்கத் தக்கன வென்று இந்தச் சங்கத்தார் அபிப்பிராயப் படுகின்றனர்.

---

அமெரிக்காவில், மூன்று பாங்கிகளையும் ஒன்று சேர்த்து ஒரு பெரிய பாங்கி ஸ்தாபிக் கப்பட்டிருக்கிறது. அதற்கு 280 கோடி டாலர் மூலதனமாம்.



## பண்டித நேருவின் தியாகம்

### 'ஆனந்த பவன்' நன்கொடை

### காங்கிரஸ் தலைவருக்குக் கடிதம்

பண்டித மோதிலால் நேரு தமக்குச் சொந்தமானதும் அலகாபாத்திலுள்ளது மான 'ஆனந்த பவன்' பங்களாவை நாட்டிற்கு நன்கொடையாக அளிக்கத் தீர்மானித்திருப்பதைப்பற்றிக் காங்கி ரஸ் தலைவரான பண்டித ஜவஹரிலால் நேருவுக்குப் பின் வருங் கடிதத்தை எழுதியிருக்கிறார்:—

அன்புள்ள தலைவரே,

22-3-30ல் ஜம்புசார் முகாமில் காந்தியடி களுடன் தாங்களும் நானும் கலந்தாலோசித்த படி, பழைய "ஆனந்த பவன்" பங்களாவைத் தேசத்திற்கு அளித்து விடுவதாகிற என் தீர்மானத்தை உங்கள் முன்னிலையில் கள த்துகிறேன். மேற்படி வீட்டின் பூர்விக வரலாற்றை உத்தேசித்தும், தேசியப் போ ராட்டத்தில், நாம் தற்போழ்து அடைந் துள்ள நிலையை உத்தேசித்தும் மேற்படி "ஆனந்த பவனை" இந்திய தேசிய காங்கிரசின் நிரந்தர தலைமை ஸ்தான மாக ஏற்படுத்திக் கொள்ளவேண்டு மென்று நாம் ஒப்புக் கொண்டோம். எனவே, மேற் படி வீட்டில், அகில இந்திய காங்கிரஸ் கமிட் டியின் காரியாலயம் நிரந்தரமாக இருக்கும். இது தவிர, காரியக் கமிட்டியாரால் அங்கீ கரிக்கப்படுகிற முறையில், மேற்படி வீட்டின் மற்றப் பாகங்களும் உபயோகப்படும். என் னுடைய இந்த நன்கொடையைக் காரியக் கமிட்டியார் அங்கீகரிக்கின்றனரா வென் பதை நான் அறிய விழைகிறேன்.

இதனுடன் இரண்டு குறிப்புகள் அனுப்பி யுள்ளேன். ஒன்று, வீடு, அஃது அமைந்துள்ள இடம் இவைகளின் பூர்விக வரலாற்றைக் குறிப்பது; மற்றொன்று, தேசத்திற்கென்று நான் அளித்திருக்கும் கட்டிடத்தின் விவரங் களடங்கியது. நன்கொடை யளிப்பதாக நான் செய்துள்ள இந்தத் தீர்மானத்தை, தேசிய வாரத்தின் ஆரம்ப தினமும், காந்தியடிக ளால் சட்ட மறுப்புத் தொடங்கப்போகும் தினமுமாகிற ஏப்ரல் மாதம் ஆறுந் தேதி நிறை வேற்ற உத்தேசித் துள்ளேன். என்னுடைய இந்தக் கொடை அங்கீ கரிக்கப் படுமானல், மேற்படி வீட்டிற்கு "சுயராஜ்ய பவனம்" என்று பெயரிட் டழைக்கப்பட வேண்டு மென்று விரும்பு கிறேன்.

அன்புள்ள

(ஒப்பம்) மோதிலால் நேரு.

மேற்கண்ட கடிதத்தில் காணப்பட்ட குறிப்புகள் ஒன்றில், பாரத்துவாஜ மகரிஷி யின் ஆசிரமத்திற்குப் பக்கத்திலேயே இந்த "ஆனந்த பவனம்" கட்டப்பட்டிருக்கிற தென்றும்ஸ்ரீராமச்சந்திருடைய காலத்தில் இங்கு ஒரு பெரிய சர்வகலாசாலை இருந்த தென்றும், இந்த "ஆனந்த பவனி"லேயே பல காங்கிரஸ் கமிட்டிக் கூட்டங்கள் கூடி யிருக்கின்றன வென்றும், ஸ்ரீமான் மாண் டேகுவின் முன்னிலையில் கிளத்தப்பட்ட காங்கிரஸ் லீக் சீர்திருத்தங்கள் இங்கேயே வரையப்பட்டன வென்றும், ஒத்துழையாக் காலத்தில் பல கூட்டங்கள் இங்கேயே நடை பெற்றிருக்கின்றன வென்றும் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. இரண்டாவது குறிப்பில் மேற்படி சொத்தின் விவரங்கள் அடங்கி யிருக்கின்றன. சமீபத்தில் புதிதாகக் கட் டப்பட்ட வீடும், பழைய சில்லரைக் கட் டிடங்களும் இந்தச் சொத்தில் சேரவில்லை.

### காங்கிரஸ் தலைவரின் பதில்

காங்கிரஸ் தலைவரான பண்டித ஜவஹரி லால் நேரு, மேற்கண்ட கடிதத்திற்குப் பின் வரும் பதிலை அனுப்பியிருக்கிறார்:—

அன்புள்ள ஐய,

பழைய "ஆனந்தபவனை" நன்கொடை யாக அளித்த உங்களுக்கு எனது நன்றி யறிதலான வணக்கம். பல ஆண்டுகளாகத் தேசீய இயக்கத்தில் சம்பந்தப்பட்டுள்ள இந்தக் கட்டிடம் தேசத்தின் சொத்தாகப் படுவது பொருத்த முடையதேயாகும். மற் றும், தேசமானது, சுயேச்சை யடைவதற் காக ஒரு பெரிய போராட்டத்தில் இறங்குந் தருவாயில் இந்தக் கட்டிடத்தைத் தேசத் திற்கு அர்ப்பணஞ் செய்திருப்பது சாலச் சிறப்புடைத்தேயாம். உங்களுடைய கொ டையைப்பற்றிக் காரியக் கூட்ட அங்கத்தி னர்களுக்குத் தெரிவித்திருக்கிறேன். அவர் களுடைய பதில்கள் கிடைத்ததும் உங்க ளுக்குத் தெரிவிக்கிறேன். புதிதாக நாம காரணமிடப்பெற்ற "சுயராஜ்ய பவனம்" தேசத்தின் சுதந்திரப் போராட்டத்தில் சிறந்த பங்கெடுத்துக் கொள்ளுமென்றும், இந்தியாவில் கூடியவிரைவில் சுயேச்சை ஏற்படுவதைப் பார்க்கு மென்றும் நம்பு கிறேன்.

உண்மையுள்ள,

(ஒப்பம்) ஜவஹரிலால் நேரு.

## ஜி. ஐ. பி. ரெயில்வே வேலை நிறுத்தம்

### அரசாங்க அறிக்கை

பம்பாயிலுள்ள ஜி. ஐ. பி. ரெயில்வே சங் கம் 18-3-30ல் ஏஜண்டுக்கு விடுத்துள்ளஒரு கடிதத்தில், வேலை நிறுத்தக் காரர்களில் எத் தனை பேருக்கு வேலை அளிக்கப்படு மென் றும், உடனே திருப்திகரமானபதில் கிடைக் காவிட்டால், ரெயில் பாதையில் சத்தியாக் கிரகம் செய்யுமாறு தொழிலாளர்களுக்கு அறிவிக்கப்படு மென்றும் குறிப்பிடப்பட் டிருக்கிறது. வேலை நிறுத்தத்தில் ஒன்றும் மாறுதலில்லை.

வேலை நிறுத்தம்புரிந்த தொழிலாளர்களில் 100-க்கு 50 பேர் தங்கள் வேலைகளில் மீண் டும் தங்களை நியமிக்கும்படி விண்ணப்பஞ் செய்து கொண்டிருக்கிறார்களென்று அர சாங்க வாயிலாகப்பம்பாயிலிருந்து ஒருசெய்தி கிடைத்திருக்கிறது. ஜி. ஐ. பி. ரெயில்வே தொழிலாளர்களில் 100-க்கு 50 பேரைமீண் டும் வேலையில் சேர்த்துக் கொள்ளவில்லை யென்னும் சமாசாரம் தெரிந்தவுடன் ஸ்ரீ வி. வி. கிரி ரெயில்வே போர்டு தொழில் அங்கத்தினருக்கு அனுப்பிய கடிதத்தில், ரெயில்வே போர்டார் ராஜியின் கருத்தைப் பின்பற்ற வேண்டுமென வற்புறுத்தினர். மேலும் எல்லாத் தொழிலாளரையும் தாமத மின்றி மீண்டும் வேலையில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக் கொண் டார்.

ஜி. ஐ. பி. ரெயில்வே வேலை நிறுத்தத் தின் போது, ரெயில்வே பாதையைக் காவல் காக்க கிராமக் காவல்காரர்களுக்குப் பணங் கொடுக்க 19-3-30-ல் பம்பாய் சட்டசபை யில் பொருளாதார மந்திரி ரூ. 16,000 கிராண்டு கேட்டார். சபை அநுமதித்தது. பல அங்கத்தினர் அரசாங்கத்தைக் கண்டித் துப் பேசினர்.

பட்டரைத் தொழிலாளர்களைத் தவிர்த்து வேலை நிறுத்தம் புரிந்த ஜி ஐ.பி. ரெயில்வே தொழிலாளர்களில் நூற்றுக்கு ஐம்பது பேரே வேலைக்குத் திரும்ப விரும்பியதால் பின் வரும் நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள ஜி. ஐ. பி. ரெயில்வே ஏஜண்டிற்கு அநுமதி யளித்ததாக இந்திய அரசாங்க அறிக்கை ஒன்று கூறுகிறது:—(1) பாரெல், மாதுங்கா, ஜான்ஸி ஆகிய விடங்களில் பட்ட ரைத் தொழிலாளர்களின் ஸ்தானங்களைத் தவிர்த்து 17-3-30வரை வேலையில் சேரா மல் வேலை நிறுத்தத்தில் இருக்கும் தொழி லாளர்களின்ஸ்தானங்களுக்குப்புதியஆட்களை நியமித்தல். முன்பிருந்தே வேலைக்கு விண் ணப்ப மளித்துள்ளவரை முதல் முதல் நிய மித்தல். பிறகு மனுதார்களைத் தேர்ந்தெடு த்து வேலையில் நியமித்தல். வேலை நிறுத் தம் புரிந்த தொழிலாளி மனு அளிக்கலாம். வேலை நிறுத்தம் புரிந்த ஒரு காரணத்தை மட்டும் கொண்டு அவருக்கு வேலை கொடு க்க மறுக்கப்பட மாட்டாது. (2) பட்டரைத் தொழிலாளரைத் தவிர்த்து, வேலையில் சேராதிருக்கும் ஒவ்வொருவருக்கும் ரெயில் வே விடுதியைக் காலிசெய்யும்படி அறிக்கை அனுப்புதல். ஒரு வாரத்திற்குள் காலி செய்யாவிடின் மாஜிஸ்திரேட் உதவியை நாடல்.

## பரமகுடி ஸௌராஷ்ட்ர ஸபா

### ஸ்ரீராம் நாமாவளி அரங்கேற்றம்

இச்சபையினுதரவில் 21-3-30மாலைஸௌ ராஷ்ட்ரஸபா எலிமெண்டரி பாடசாலையின் கண் பிரஹ்மஸ்ரீ க. வெ. ராம. சுந்தரராஜய் யர் அவர்களுடைய அக்கிராஸனத்தின்கீழ் ஒரு மஹாஜனக் கூட்டம் கூடியது. "ஸௌராஷ்ட்ர" பத்திராதிபர் ஸ்ரீமான் வி. செ. நன்னய்யர் அவர்கள் ஆரம் பத்தில் பகவத் ஸ்தோத்திரங்களை ஸம்ஸ்கிருதத்திலும், ஸௌராஷ்ட்ரத்திலும் மிக்க தெளிவாகப் பாடினர். அதன் பின் னர் அய்யரவர்கள் ஸௌராஷ்ட்ர பாஷை யில் கவனம் செய்திருக்கும் "ஸோத்ராட் ஸ்ரீராமநாமாவளி"யானது ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி அவர்களின் ஸிஷ்யபாரம் பர்யோத் பவரான வாலாஜா நகர் ஸங்கீத ஸாஹித்ய ஸம்ஸ்கிருதாந்த்ர கலாப்ர வீணரான பிரஹ்மஸ்ரீ கு. கு. இராமசுவாமி பாகவத ரவர்களால் ஸ்ரீமத் வால்மீகி இராமாயணத் துடனும், ஸ்ரீமத் ஸௌராஷ்ட்ர இராமாய ணத்துடனும் ஒத்திட்டுப் பரிசீலிக்கப்பட்டு முத்ராங்கிதம் கொடுக்கப்பட் டிருக்கும் ஸ்லோகங்களை முதலில் பாடிவிட்டு அடுத் தாற்போல் கிரந்த கர்த்தாவின் ஸ்லோக பூர்வமான பிரார்த்தனைகளும்பாடப்பட்டன. அஃதானதும் ஸ்ரீராம நாமாவளியை அய்யா வாள் எவரும் எளிதில்அறியக்கூடியதாகவும் பாடினர். "ரகுபதிராகவ ராஜாராம், பதிதபா வன ஸீதாராம்" என்கிற நாமாவளியும் "ராமாராமஜய ராஜாராம், ராமாராம ஜய ஸீதாராம்" என்கிற நாமாவளியும் பாடப்பட் டன. பின்னர் சாரதா சட்டம் கண்டனம் செய்யப்பட்டது என்று காரியதரிசி தெரி விக்கிறார்.

## பழனி சன்மார்க்க சங்கம்

நிகழ்ந்த மாரியம்மன் விழாவை முன் னிட்டு 16-3-30 ஞாயிற்றுக் கிழமை மாலை 6 மணிக்குப் பெரியநாயகி யம்மன் கோயி லின் முன்பாக சிவில் அஸிஸ்டெண்டு சர் ஜன் கேப்டன் திரு. எஸ். காந்திமதி நாதன் அவர்கள் தலைமையில், "நமது கடமை" "சன்மார்க்கம்" "பலி நிறுத்தலும் புலால் நீக்கமும்" என்னும் பொருள்கள் பற்றி முறையே திண்டுக்கல் திரு. க. வாலையானந் தம் அவர்கள், திரு. ஸி. சுவாமி சிவநேசம் அவர்கள், திரு. அரங்கசாமிக் கவிராயர் அவர்கள் முதலாயினோர் பேசினர்கள்.

இரண்டாம் நாட் கூட்டம் :—17-3-30 திங்கட்கிழமை மாலை 6 மணிக்குப் பெரிய நாயகியம்மன் கோயிலின் முன் மேற்படிச் சங்கத்தின் சார்பாக கொங்குமண்டல சமரச சன்மார்க்க நிலயகுரு திரு. ஸி. சுவாமி சிவ நேசம் அவர்கள் தலைமையின் கீழ் "அன்பே கடவுள்" "சூது முனிவரின் அணைவர் ஐவர்" "முயற்சி" என்னும் பொருள்கள் பற்றி முறையே திரு. வாலையானந்தம் அவர் கள், திரு. அரங்கசாமிக் கவிராயர் அவர்கள், திரு. காளிதாசன் அவர்கள் முதலாயினோர் மிக இனிமையும் உருக்கமுமாக நீண்டநேரம் பேசினர்கள் என்றுஒரு நிருபர் எழுதுகிறார்.

## திருப்பேரூர்த் தேர்த்திருவிழா

ஸ்ரீ மேலச் சிதம்பரமென்னும் திருப்பே ரூரில் திருத்தேர்த் திருவிழா நாளது சுக்கில ஆண்டு பங்குனித் திங்கள் 20-ம் நாள் (2-4-30) தொடங்கி மேற்படி பங்குனி 29-ம் நாள் (11-4-30) வரை நடைபெறும். 11-4-30 பங்குனி உத்திரத்தன்று திருப்பே ரூர்த்தலபுராணமும் வெளியிடப்படும் என்று ஓர் அன்பர் நமக்கு அறிவிக்கிறார்.

## ஸ்ரீ ஆண்டாள் காலமும் ஜனன ஜாதகமும்

மேற்கண்ட தலைப்புடன் சென்ற வார 'நவசக்தி'யில் (26-3-30) வெளிவந்தகட்டுரை யில் 2-வது எண்ணுள்ளபாராவைப் பின்வரு மாறு திருத்திப் படித்துக் கொள்ள வேண்டு மென்று வாசகர்களைக் கேட்டுக் கொள்கி றோம்:—

"2. இதனல் கிழமை செவ்வாய் என்ற தும், மாதம் ஆடி என்றதும், தேதி 8-என்றும் கலியுக வருஷத்தில் சென்றது 97 என்றும் பிரபவாதியில் அப்போது நிகழ்ந்தது அநல என்றும் ஜனன வேளை சிறிது குறைந்த கடுப்பகலென்றதும் பொருந்தியனவாம்."

ஒன்பதாவது பாரா இரண்டாவது வரியில் "உச்சஸ்தமான" என்றிருப்பதை "உச்சஸ் தான" என்று திருத்திக் கொள்க.

## "டெயிலி எக்ஸ்பிரஸ்" பத்திரிகை விற்பனை வழக்கு

சென்னை "டெயிலி எக்ஸ்பிரஸ்" பத்திரி காலயம் கோர்ட்டு மூலம் விற்பனைக்கு வந்த பொழுது சிந்தாதிரிப்பேட்டை ஸ்ரீமான் லட்சுமிகாந்த முதலியார் என்னும் 22-வய துள்ள வாலிபர் அதைத் தாம் 20 ஆயிரம் ரூபாவுக்கு வாங்குவதாக முன் வந்தார். ஆரம் பத்தில் இவர் ஆயிரம் ரூபா முன் பணமாகக் கொடுத்திருந்தார். சென்ற [illegible] முழுப்பணம் செலுத்தாவிடின், [illegible] செலுத்தப்பட்ட ஆயிரம் ரூபா பறிமுதல் செய்யப்படுமென்று அறிவிக்கப்பட்ட [illegible] னர் பிப்ரவரிமீ இவர் கோர்ட்டில் பிரமாண [illegible] மாகித் தாம் முழுத் தொகையைச் செலுத்தி விட்டதாகவும், அபிஷியல் லிக்விடேட்டர் சொத்துக்களைத் தம்மிடம் ஒப்புவிக்கும்படி யாகவும் ஒரு மனு கொடுத்தார். அபிஷியல் லிக்விடேட்டர் சார்பாக, மனுதார் முழுத் தொகை செலுத்தவில்லையென்றும், பணஞ் செலுத்தியதாகக் கோர்ட்டு முன் சமர்ப்பித் திருக்கும் ரசீது பொய்க்கையெழுத்திடப்பட் டிருக்கிற தென்றும் தெரிவித்துக்கொள்ளப் பட்டன. எனவே இவ்வழக்கு விசாரணை 24-3-30 முதல்சென்னை ஹைக்கோர்ட் நீதி பதி ஸ்ரீ எட்டி முன் நடைபெற்று வந்தது. இதுவரை ஐயாயிரம் ரூபாவே மனுதார் செலுத்தி யிருக்கிறாரென்றும், 15 ஆயிரம் ரூபா செலுத்தியதாகச் சொல்லுவது மோச மென்றும், அவர் காட்டும் பிர மாணப் பத்திரம், ரசீதுகள் இவைகளில் பொய்க்கையெழுத் திடப்பட்டிருக்கிறதென் றும் லிக்விடேட்டர் மானேஜர் ஸ்ரீ [illegible] மேனன் கூறினர். நீதிபதி 28-3-30ல் மனுதார் முழுப்பணங் கொடுக்கவில்லையென் றும், ரசீதுகள், பிரமாணப் பத்திரம் இவை களில் பொய்க்கையெழுத்திடப்பட் டிருக்கிற தென்றும் கூறி மனுவைத் தள்ளிவிட்டார். அபிஷியல் லிக்விடேட்டர் சார்பாக ஸ்ரீ நியூஜெண்ட கிரான்ட் கோர்ட்டு முன் பொய் சொல்லியதற்கும், பொய்க் கையொப்பமிட் டதற்கும் இன்னும் பல மோசங்களுக்கும் ஸ்ரீ லட்சுமி காந்தத்தைக் கைதுசெய்து மாஜிஸ்திரேட்டு கோர்ட்டில் விசாரணை செய்ய வேண்டுமென்று நீதிபதி முன் ஒரு மனு கொடுத்தார். நீதிபதி மனுவை ஒப்புக் கொண்டதால் ஸ்ரீலட்சுமி காந்தம் கைது செய்யப்பட்டார்.

## சுவாமி பவானிதயாள் கைதியானர்

தென்னுப்பிரிக்காவி லிருந்து இந்தியாவுக் குத் திரும்பி இந்தியர்களுடைய நிலை யை விசாரிக்க வந்தவரும், ஷாஹாபாத் ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவருமான சுவாமி பவானிதயாள் 29-3-30-ல் பாட்னா வில் ஆரா என்னுமிடத்தில் இ. பி. கோ. 124—ஏ. பிரிவுப்படி இராஜத்துவேஷக் குற் றஞ் சாட்டப்பட்டுக் கைது செய்யப்பட்டார். இவர் பீஹார் மாகாணத்தில் சட்ட மறுப்பு இயக்கத்திற்காக மும்முரமாகக் காங்கிரஸ் பிர சாரம் செய்து வந்தார்.

என்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1930௵ ஏப்ரல்௴ 2உ

## நாட்டு வாரம்

வரும் வாரம் நமது நாட்டு வாரம். அவ்வாரம் நாட்டுக்குரிய ஒரு வாரமாக ஆண்டுதோறும் பாரத மக்களால் கொண்டாடப் படுகிறது. அக்கொண் டாட்டத்தின் நோக்கமும் காரணமும் நேயர்கட்குத் தெரியும்.

வரும் வாரம், ஐந்து நதி பாயும் அழ கிய நாட்டில் படுகொலை நிகழ்ந்த வாரம்; இராணுவ ஆட்சி தாண்டவம் புரிந்த வாரம்; ஜலியன் வாலாவாரம். அவ்வாரத்தில் பாரதமக்கள் அடிபட் டார்கள்; உதைபட்டார்கள்; மூலைக்கு மூலை சுடப்பட்டார்கள். அவ்வாரத்தில் பாஞ்சாலம் படாதபாடு பட்டது. ஆங்கே பாரதமக்கள் உற்றதுயரையும், சாதுக்களும் பெண் மக்களும் பட்ட பாட்டையும் எவ்வெழுத்தால் எழுது வது? டையர் கொலையும், ஓட்வியர் கொடுமையும், ஜெம்ஸ்பர்ட் அடாத செயலும் பாரதநாட்டின் உள்ளத்தை என்றுதல் விட்டகலுங் கொல்?

1919-ம் ஆண்டில் ஏப்ரல் மதியில் உற்ற ஒரு வாரம் "பஞ்சாப்படுகொலை வாரம்" என்னும்பெயரால் சரித்திர உல கில் படிந்து கிடக்கிறது. பாரத மக்கள் இரத்த ஆற்றைக் கண்ட வாரம் அவ் வாரம்.

அவ்வாரம் நாட்டுக்குச் செய்தநலன் பெரிது; பெரிது; மிகப் பெரிது. பஞ் சாப் படுகொலை வாரம், நாட்டின் சவலை யைப் போக்கிற்று; நாட்டைத் தட்டி எழுப்பிற்று; விடுதலை வேட்கையை எங்கணும் எழுப்பிற்று.

ஒத்துழைப்பின் தீமையை உள்ளங் கை நெல்லிக்கனிபோல் விளங்கச் செய் தது எது? ஒத்துழையா உணர்வை யூட் டியது எது? அச்சமென்னும் பேயை ஓட்டியது எது? பஞ்சாப் படுகொலை யன்றோ? இளங்கோவின் வரவேற்பில் தேசபக்தர்கள் கலவாத ஆண்டகைமை யும், 25000-ம் பேரைச் சிறைபுகு வித்த அஞ்சாமையும் வீரமும் யாண் டிருந்து எழுந்தன? பஞ்சாப் படு கொலையி லிருந்தன்றோ? அன்று பஞ் சாப் படுகொலை ஈன்ற ஒத்துழையாமை இன்று எந்நிலையுற்றிருக்கிறது?

படுகொலைவாரத்திற்குக்கால்கொண்ட நாள் ஏப்ரல் ஆறும் நாள். இவ்வாண்டு அந்நாளில் என்ன நிகழப் போகிறது? நேயர்களே! உன்னுங்கள்.

ஏப்ரல் ஆறும் நாள்-வரும் ஞாயிற்றுக் கிழமை-மகாத்மாகாந்தி, இந்தியத்தலைவ ராக நின்று தண்டியில் சாத்வீகப் போர் துவக்கப் போகிறார். அப்போருக்கு வேண்டப்படும் முன்னணி வேலை கள் ஆங்காங்கே நிகழ்ந்தேறி வரு கின்றன. பெருஞ் சாத்விகப் போர் பாஞ்சால வாரத்தில் நடைபெறப் போகிறது. அப்போருக்குத் துணை புரி யும் வாயிலாகவே இம்முறை நமது நாட்டு வாரத்தைக் கொண்டாடுதல் வேண்டும்.

1919-ம் ஆண்டில் சத்தியாக்கிரஹ இயக்கத்தின் போது அரசாங்கத்தார் கைக்கொண்ட முறையை, இப்பொழுது கொள்ளமாட்டார் என்று நம்புகிறோம். தொண்டர்களிடத்தும் வெறி கொதி ப்பு முதலிய மூர்க்க நீர்மைகள் எழ மாட்டா என்றும் நம்புகிறோம். நாளு க்கு நாள் நாகரிகம் வளர்ந்து வரு கிறது. நாகரிகத் துறைகள் பலபல. அவைகளுள் உயிர் போன்றது எல்லா உயிரையுந் தன்னைப்போல் கொண்டு அன்பு செய்வதாகும். அவ்வன்பு நெறி வளர்ச்சிக்குச் சாத்விகப் போர் அடிப்படை என்று சொல்லவேண்டுவ தில்லை.

காந்தியடிகள் அன்புநெறி வளர்ச்சிக் குரிய சாத்விகப் போர் முனையில் நிற்கி றார். காந்தியடிகள்தொடுத்துள்ள அறப் போர் எவர்மீதும் பகைமைகொண்டது அன்று. அது மனிதர் பாலுள்ள விலங்கு நீர்மையைக் களைந்து, தெய்விக நீர்மையைப்பெய்வதாகும். அப்போர் முறைபெருகப் பெருக மக்களிடத்துச் சகோதர நேயமும் பெருகும். ஆதலால் அப்போருக்குத்தற்போதைய அரசாங்க த்தைநடாத்துவோர் துணையும், தொண் டர்கள் துணையும் இன்றியமையாதன. இரு சாரார் துணையும் ஆட்சிமுறையைத் தூய்மைப்படுத்து மென்பதில் ஐய மில்லை. இம்முறை எப்பக்கத்திலும் மூர்க்க சக்தி எழாதிருப்பதாக.

காந்தியடிகள் தொடுத்துள்ள போர் வெற்றியுறுமா தோல்வியுறுமா என்று எவரும் ஆராய்ச்சியிற் புகவேண்டுவ தில்லை. காந்தியடிகள் புறப்பட்டுமூன்று வாரங்களாகின்றன. அவர் கால் நடை யாகவே செல்கிறார். யாண்டும் அமைதி குலையவேயில்லை. அவரது தரைச் செலவு மக்கள் உள்ளத்தைக் கவர் கிறது. கடற்படை யென்ன - தரைப் படையென்ன - ஆகாயப்படையென்ன - இப்படைகளிற் சிறந்து விளங்கும் ஓர் ஆட்சி முறையிலுள்ள "தீமையைக் களைவேன்" என்று மூன்று வாரமாக அறப்போர்ப் படையை அமைதி குலை யாத முறையில் நடாத்திச் செல்லும் ஒரு வீரர் தொடுத்துள்ள போரில் வெற்றி விளையுமா தோல்வி விளையுமா என்று ஆராய்ச்சி செய்யவேண்டுவது அநாவசியம். ஆதலால் அடிகள் தொடுத் துள்ள அறப்போருக்கு அவரவர் தத் தம்மாலியன்ற உதவி புரிய முந்துவதே அறிவுடைமை.

அறப்போர் படையில் சேர்வோர் சேர்க. பொருள் உதவுவோர் உதவுக. மனமார வாழ்த்துவோர் வாழ்த்துக. எவ்வழியிலாதல் மகாத்மாவின் போரு க்கு ஒவ்வொருவரும் துணை புரிவாராக.

கட்சிப் பிணக்குகளைக் கொணர்ந்து மகாத்மாவின் அறப்போர் இயக்கத்தில் நுழைத்தல் கூடாது. மகாத்மாவின் போர் கட்சிப் பிணக்குகளைக் கடந்து நிற்பது. ஆதலால் எல்லாக் கட்சி யாரும் தாம் தாம் விரும்பும் முறையில், அளவில் துணை செய்யலாம். உதவி நல்க விரும்பாதார் இடையூறு புரியாதிருத்தல் நலம்.

கட்சிப் பிணக்குகள் நந்தமிழ் நாட் டில் அதிகம் என்று சொல்லப்படு கிறது. கட்சிப் பிணக்குகள் என்றுதல் ஒருபோது முடிவிற்கு வந்தே தீரல் வேண்டும். அதற்கென ஏதாவது ஒரு நிகழ்ச்சியை எதிர்நோக்கிக் கொண் டிருக்க வேண்டுவது தேசபக்தர் கட மை.

தமிழ் நாட்டில் தோன்றியுள்ள கட் சிப் பிணக்குகளைத் தொலைப்பதற்கு இப்பொழுது சிறந்ததொரு வாய்ப்பு கிடைத்திருக்கிறது. அதனை நன்முறை யில் பயன்படுத்தத் தமிழ் நாட்டுத் தலை வர்கள் முயல்வார்களென நம்புகிறோம். மகாத்மா தொடுத்துள்ள சாத்விகப் போர் கட்சிப் பிணக்குகளைத் தொலைத் துக் கொள்ளுதற்குரிய சிறந்த வாய்ப்பு என்பதில் ஐயமில்லை. அதனால் நலன் விளைவதாக.

பாரதமக்களே! எழுங்கள்; எழுங் கள்; நமது நாட்டு வாரத்தைக் கொண் டாட எழுங்கள். இவ்வாண்டு மிகச் சிறப்பாக அதைக் கொண்டாடல்வேண் டும். காந்தியடிகள் போர்முனையில் நிற் கிறார். அவருக்குத் துணைபுரிய எழுங் கள்; எழுங்கள். சகோதரிகளே! சகோ தரர்களே! பாஞ்சாலத்தை நினையுங் கள்; ஜாலியன் வாலாபாக்கை நினையுங் கள்; டையரை நினையுங்கள். நினைந்து சாத்விகப் போருக்கு இயன்ற துணை புரிய உறுதி கொள்ளுங்கள். வெகுளி வேண்டாம்; வன்மம் வேண்டாம்; கட்சி வேண்டாம்; பிணக்கு வேண் டாம். பஞ்சாப் படுகொலையில் உயிர் துறந்த மக்கள் நுண்ணுடல் கொண்டு உங்களை நோக்குகிறார்கள். சாத்விகப் போருக்கு அவர்கள் ஆசி கூறுகிறார்கள். அவர்கள் எதன் பொருட்டு உயிர் துறந் தார்கள்? அதையுணர்ந்து மன்பதைக் குச் சேவை செய்ய எழுங்கள்; எழுங் கள்.

## இடியேறு

### விநோத சமாதானம்

காந்தியடிகள்சத்தியாக்கிரகத் தரைச் செலவைப்பற்றிய சினிமா படங்களைப் பிறமாகாணஅரசாங்கத்தினரைப்போல் சென்னை மாகாண அரசாங்கத்தினரும் தகைந்து விட்டனர் என்பது நேயர் களுக்குத் தெரியும். இங்ஙனம் தகைந் ததற்குச் சென்னைச் சட்ட சபையில் ஸர் முகம்மது ஊஸ்மான் கூறிய கார ணம் மிக விநோதமா யிருக்கிறது. சினிமா படங்களைப் பாமர ஜனங்கள் பார்த்தால், அவர்களும் உப்புச் சட் டத்தை மீறத் தொடங்கி விடுவார்க ளாம்! மற்றும், சட்ட மறுப்பு இயக் கத்தை விளம்பரம் செய்யவே இந்தச் சினிமா படங்கள் உபயோகப்படுத்தப் படும் என்றும் இவர் கூறுகிறார். இவ்விரு காரணங்களையும் ஹோம் அங்கத்தினர் கூறாமலிருந்தால் நன்றாயிருந்திருக்கும். இத்தகைய தடை முறைகளால் ஜனங் களின் தேசிய உணர்ச்சியைத் தகைந்து விடுதல் முடியாது. சட்ட மறுப்பு இயக் கச் சம்பந்தமான எல்லா விவரங்களும் பத்திரிகைகளில் வெளியாகி வருகின் றன. சினிமா செல்லாத இடங்களிலும் பத்திரிகைகள் செல்கின்றன. இவை களைப் பாமர ஜனங்கள், தாங்களே படித்தோ, பிறர் படிக்கக் கேட்டோ எல்லாச் செய்திகளையும் அறிந்துகொள் கிறார்கள். இவைகளையும் ஹோம் அங் கத்தினர் தடுத்து விடுவாரா? மாகாண அரசாங்கங்கள் ஒன்று சேர்ந்து, இந் நச் சினிமா படங்களைத் தடுத்துவிட்ட தொன்றினாலேயே, சத்தியாக்கிரக இய க்கத்தின் வளர்ச்சி சிறிதும் குன்றாது என்பதை அரசாங்கத்தார் விரைவில் உணர்தல் நலம்.

### பெரிய நன்கொடை

பண்டித மோதிலால் நேரு, அலகா பாத்தில் தமக்குச் சொந்தமான "ஆனந்த பவன்" என்னும் பங்க ளாவை நாட்டிற்கு நன்கொடையாக அளித்து விட்டார். இதற்காக அவரை எவரும் பாராட்டாமலிருக்க முடியாது. தேசபந்து தாஸர், தமது அரண்மனை போன்ற அழகிய இல்லத்தைத் தேசத் திற்குத் தியாகம் செய்துவிட்டது அன் பர்களுக்கு நினைவிருக்கும். இந்நீர போகத்தை நுகர்ந்து வந்த பண்டித நேரு, இதுகாலை தமது 'ஆனந்த பவ ன'த்தை நாட்டிற்கு அளித்துவிட்டார். பண்டிதரின் தேசபக்திக்கும், அவர் ஆற்றி வரும் தொண்டுக்கும் இந்தத் தியாகம் அணி செய்வதாகும். இந்த இடம் இனி "சுயராஜ்ய பவனம்" என் றழைக்கப்படும். இது மிகப் பொருத்தமுடைத்து. தமிழ்நாட்டார் சார்பாக, பண்டித நேருவுக்கு நமது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள் கிறோம்.

### மதுபானத்தினின்று வருமானம்

சென்னையில் பல இடங்களில் மது பானங்கள் விற்கப்படுகின்றன. இந்த இடங்களின் உபயோகத்திற்காக, அர சாங்கத்தார், சென்னை நகரசபைக்கு 13,610 ரூபா கொடுக்கின்றனர். இந்த வருமானம் வேண்டா மென்றும், இதை அரசாங்கத்தா ரிடமே திருப்பிக் கொடுத்துவிட வேண்டு மென்றும் சமீ பத்தில் நடைபெற்ற சென்னை நகரசபைக் கூட்டத்தில், 1930-31-ம் ஆண்டு வரவு செலவுத் திட்டம் ஆலோசனைக்கு வந்த போது, ஓர் அங்கத்தினர் தீர்மானம் கொணர்ந்தார். இந்தத் தொகை கெட்ட வழியில் கிடைக்கிறதென்றும், சென்னை நகரசபை மதுபான வழக்கத்தை எதிர்க் கிற தென்பதை அரசாங்கத்தாருக்குக் காட்ட வேண்டு மென்றும் இந்தத் தீர் மானத்தைக் கொணர்ந்தவர் பேசினர். ஆனால், அவையின் அதிக வாக்குப் பெற்று இந்தப் பிரேரணை தோல்வி யடைந்து விட்டது. இது பெரிதும் விசனிக்கத் தக்கது. தமிழ்நாட்டிலுள்ள பல ஸ்தல ஸ்தாபனங்கள், பூரண மது விலக்கை ஆதரித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றி யிருக்கின்றன. ஆனால் மாகாணத்தின் தலைநகர சபையானது, இந்தச் சொற்பத் தொகையை இழக்க வும் பின் வாங்குகிறது. இந்தத்தொகை யைக் கொண்டு, ஜனங்களுக்கு நன்மை தரும் துறைகளில் செல வழிக் கலாமென்று கூறுவது சரியான வாத மாகாது. இந்தத் தொகை, தனியாக எடுத்து வைக்கப்பட்டுச் செலவழிக்கப் படவுமில்லை. இந்தச் செயலுக்காக, நகரசபைப் பிரதிநிதிகளை, வரி செலுத் துவோர் கண்டிப்பர் என்று நம்புகி றோம்.

### இன்னும் சட்ட சபையா?

"மாதா வயிறெரிய மகேசுவர பூஜை யா?" என்றொரு மூதுரை தமிழ் நாட் டில் வழங்கி வருகிறது. அதுபோல், நாடெங்கணும் காந்தியடிகளின் அஹி ம்சா தரும இயக்கம் பரவி, அனைவருக் கும் ஒரு புத்துணர்ச்சியை அளித்துக் கொண்டு வரும் இச்சமயத்தில் சிலர் சட்ட சபைகளைக் கட்டிக் கொண்டழுவ தன் நோக்கம் நமக்கு நன்கு புலனாக வில்லை. அதிலும் காங்கிரஸ்காரர் என்று பெயர்படைத்து, பல்லாண்டுகளாகத் தேசப்பணி யாற்றிவரும் பண்டித மதன்மோகன மாளவியா போன்றார், இன்னும் சட்ட சபையில் இருந்து ஒழி மல் கூச்சலிட்டுக் கொண்டிருப்பது, நாட்டிற்குத் தீமை செய்வதுபோலவே யாகும். ஆதலின் இந்தியா சட்டசபை யின் அங்கத்தினர் சிலர், பண்டித மாள வியாவுக்கு ஒரு பகிரங்கக் கடிதம் எழுதி, அதில் காந்தியடிகளுக்குத் துணை நிற்குமாறு கேட்டிருப்பதைக் குறித்து நாம் ஆச்சரியப்படவில்லை. பண்டித மாளவியா போன்ற வயதும் அநுபவ ஞானமும் நிறைந்த பெரியோர் போர் முனையிலிறங்குவதே சால்புடை த்தாம். தற்போது கருத்து வேற்றுமை களை வெளியிட்டுப்பிணக்கை வளர்ப்பது அறமாகாது. இந்தியாவின் நன்மையை நாடும் ஒவ்வொருவரும் இச்சமயம்காந்தி யடிகளுக்குத் துணை நிற்பதைத் தங் கடனாகக் கொள்ளவேண்டும்.

### ஸ்ரீமான் சென்குப்தாவின் விடுதலை

சிறைச்சாலைகளின் இன்ஸ்பெக்டர் ஜென ரல் கர்னல் தாராபூர், இரங்கூன் சென்ட்ரல் ஜெயில் சூபரின் டெண்டெண்ட் கர்னல் பிலோடியூ, தலைமை ஜெயிலர் இவர்களுடன் இரவுக்காகச் சிறைச்சாலைக் கதவுகள் மூடப் பட்ட பின்னர், இரங்கூன் சென்ட்ரல் சிறைச்சாலைக்கு 30-3-30 மாலை 6-30-மணி க்குத் திடீரெனப் போந்து ஸ்ரீமான் சென் குப்தாவை விடுதலை செய்து விட்டதாகத் தெரிகிறது. ஸ்ரீமான் குப்தா இரங்கூனில் டாக்டர் பி. டீ. மேட்டாவின் இல்லத்தில் தங்கி யிருக்கார். 31-3-30-ல் இரங்கூன் பிச்சின்ஸ்கொயரில் மாஜி இந்தியா சட்டசபை அங்கத்தினரான ஸ்ரீமான் ஹிலா டன் பிரு என்பார் தலைமையில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் ஸ்ரீமான் சென்குப்தா சிறப்பாக வரவேற்கப்பட்டார். அப்போது ஸ்ரீ குப்தா இராஜத்துவேஷ சட்டத்தைக் கண்டித்துப் பேசினர். ஸ்ரீ குப்தா 1-4-30 காலையில் "அரங்கோலா" என்னும் கப்பலில் கல்கத்தா புறப்பட்டுவிட்டார்.



# அடிகட்கு எங்கணும் ஆதரவு

## நருமதையைக் கடந்த காட்சி

## தாதாபாய் பௌத்திரியின் வேண்டுகோள்

## எதிர்ப்பிரசாரத் தொடக்கம்

### அடிகள் முறையீடு

### டிரோல்

25-3-30 இரவு காந்தியடிகள் திருக்கூட் டத்தார் டிரோல் என்னுமிடத்திற்குச் சென்றார் என்று சென்ற பாலில்தெரிவித் தோம். அன்று, ஒரு பொதுக்கூட்டத்தில் காந்தியடிகள் பேசியது வருமாறு:—

"உப்புவரி ஏற்பட்டது முதலே மக்கள் அதை மறுத்து வருகிறார்கள். காங்கிர ஸும் அதை மறுத்து வந்திருக்கிறது. ஆனால் அரசாங்கத்தார் வருவாயை உத்தேசித்து உப்புவரியில் ஒரு பைசா கூட குறைக்க இசையவில்லை. உப்புவரியால் 6 கோடி ரூபாவும் சாராயம் அபினிமுதலியவைகளால் 25 கோடி ரூபாவும் அரசாங்கத்தாருக்கு கிடைக்கிறது. நீங்களெல்லோரும் முனைந் தால் இந்த 31 கோடி ரூபாவையும் மிகுதிப் படுத்தலாம். முப்பது கோடி மக் களும் உப்புவரி செலுத்த மறுப்பின், அர சாங்கத்தார் அவ்வரியை எங்ஙனம் வசூல் செய்வர்? அங்ஙனமே சாராயம் அபினி வியாபாரத்தையும் ஒழித்து விடலாம். 1921-ம் ஆண்டில் ஆசாமில் அபினிக் கடை களையும், பீகாரிலும் மத்திய மாகாணத்தி லும் மதுபானக் கடைகளையும் மூடியதனா லன்றோ ஒரு கோடி ரூபா மிகுதியாயிற்று. தற்போது நாம் உப்பு வரியையே எதிர்த் துப் போராடுகிறோம். எனது படை, கடவு ளின் திரு நாமத்தை உச்சரித்துக் கொண் டே செல்லுகிறது. பலாத்கார முறைகள் எனக்குத் தெரியாது. எங்குக் கடவுள் உண் டோ அங்கு வெற்றி நிகழ்வது திண்ணம்."

இந்தக் கூட்டத்திற்கு இந்துக்களுடன் அநேக முஸ்லீம், பார்ஸி நண்பர்களும் வந் திருந்தார்கள். இவ்வூரிலுள்ள போரா வகுப் பினர் அடிகளுக்கு ஒரு பண முடிப்பு அளித் தனர்.

### புரோச்

26-3-30 காலை காந்தியடிகள் திருக்கூட் டத்தார் புரோச் நகரம் போந்தனர். நகரம் நன்றாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அடி கள் சிறப்பாக வரவேற்கப் பட்டார். அவரைத் தரிசிக்க ஏராளமான மக்கள் கூடியிருந்தார் கள். மகாத்மா சேவாசிரமத்தில் தங்கியிருந் தார். பிரத்தியேகமாகப் போடப்பட்டிருந்த ஓர் அழகான பந்தலில், ஆயிரக் கணக்கான மக்கள் முன்னிலையில் அடிகள் நிகழ்த்திய சொற்பொழிவு வருமாறு:—

"ஒரு முஸ்லீம் இளைஞர் சில வினாக்கள் குறிப்பிட்டு ஒரு கடிதம் எனக்கு அனுப்பி யுள்ளார். அவற்றில் இரண்டு வினாக்களுக்கு மட்டும் பதிலிறுக்கிறேன். முதல் கேள்வி, நான் இந்துக்களின் உதவியால் மட்டும் சுய ராஜ்யம் பெற முடியுமா என்பது. நான் இதைக் கனவிலும் கருதவில்லை. இவ்வியக்க முழுவதற்கும் கடவுளின் பலமிருப்பதால், நான் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித் திருக்கி றேன். கடவுள் என் இயக்கத்தை ஆசீர்வ தித்துப் பலமளிப்பின், எந்த வகுப்பினரு டைய பலமும் எனக்கு வேண்டாம். கடவுள் என்பால் இல்லாவிடின் என்னுடைய அவய வங்கள் எல்லாம் செயலற்றுப் போய்விடும். நான் இத்தனை காலமாகச் சட்டமறுப்பு ஆரம் பியாததற்குக் காரணம், என்னிடம் தன் னம்பிக்கை இல்லாததே. இப்போது எனக் குத் தன்னம்பிக்கை ஏற்பட்டுளது. ஆண்ட வன் எனக்குத் தந்துள்ள ஆற்றலை இது போது உபயோகப்படுத்த வேண்டுமென நினைக்கிறேன். அதற்கு இச்சமயமே தக்க சமயம். இந்துக்களும், முஸ்லீம்களும் என க்கு உதவிசெய்ய வேண்டுமென வேண்டு கிறேன். ஒவ்வோர் ஆணும், பெண்ணும் குழந்தைகளும், ஆங்கிலேயர்களுங் கூட உதவி செய்ய வேண்டும். கடவுளின் கிருபை இருந்தால் சத்தியாக்கிர கத்தை நடாத்த இயலும். தியாகத்தின் மூலமே கடவுளின் கிருபையைப் பெறமுடி யும். மனத் தூய்மையும், தன்னலத் தியாகமுந் தான் நம் இயக்கத்திற்கு ஆணி வேர்களாகும். உண்மையான முஸ் லீம் நண்பர்கள் என்னிடம் இருக்கிறார்க ளென நம்புகிறேன். மௌலானா ஷவுக்கத் அலி இச்சமயம் என்னுடன் இல்லையென் பது உண்மையே. ஆனால் என் உள்ளம் புனிதமா யிருப்பதால், அவர் மீண்டும் என் பால் வருவார் என்று கருதுகிறேன். முன் னர், அவருடைய பையில் அவர் என்னை வைத்துக் கொண்டிருந்தார். இப்போது, அலி சகோதரர்களை நான் என் பையில் வைத்துக் கொள்வேன். முஸ்லீம்களிடம் எனக்குள்ளநட்பை வெளிப்படுத்த நான்விரு ம்பவில்லை. தற்கால ஆட்சி முறையைக் களை யவேபுறப்பட்டிருக்கிறேன். நான்பிரிட்டிஷா ரின் அதிகார வர்க்கத்தை வெறுக்கிறேன். ஆனால் நான் ஆங்கிலேயரை நேசிக்கிறேன். அதற்குப் பிறகு அரசாங்கம் என் னைத் தூக்கிலிடட்டும், அல்லது உயிருடன் என்னை வெந்நீரில் வேகவைக்கட்டும். நான் இராஜப் பிரதிநிதியா யிருப்பின் முஸ்லீம் களுக்கு எத்தனை ஸ்தானங்கள் அளிப்பே னென்பது எனது நண்பரின் இரண்டாவது கேள்வியாகும். நான் இராஜப் பிரதிநிதி யாக விருப்பின், முஸ்லீம்கள், பார்ஸிகள் இவர்கள் என்ன கேட்பினும் கொடுக்கத் தயங்கமாட்டேன். ஆனால் அவர்களுக்கு இத்தனை ஸ்தானங்கள் என்று நிர்ணயிக்க எனக்கு சக்தியில்லை. காங்கிரஸ் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை விரும்ப வில்லை. அது இந்தியர்கள் என்னும் ஒருமையையே விரும்புகிறது."

### அங்கலேஸ்வர்

26-3-30 மாலை 6 மணிக்குக் காந்தியடிகள் திருக்குழுவினர் புரோச் சேவாசிரமத்தி லிருந்து அங்கலேஸ்வருக்குப் புறப்பட்டனர். சேவாசிரமத்திலிருந்து நர்மதை நதிவரை இருமருங்கிலும் அடிகளைத் தரிசிக்க ஜனங் கள் ஆவலுடன் நின்று கொண்டிருந்தார்கள். ஜனங்கள் தங்கள் வீடுகளையும், கடைகளை யும் பலவிதமாக அலங்கரித்து இருந்தது மன்றி, மாடி வீடுகளின் தாழ்வாரங்களிலும், ஜன்னல்களிலும் வீட்டின் புகைக்கூண்டின் மேலும் நின்று கொண்டிருந்தார் கள். இதனால் மக்களின் உற்சாகம் நன்கு வெளியாயிற்று. அன்று எங்கும் மக்கள் கூட் டமே நிறைந்திருந்தது. ஆசிரமத்திலிருந்து நதிக்கரைக்கு 25 நிமிஷத்தில் அடிகளார் வந்து சேர்ந்தார். இவ்வளவு வேகமாகவும், உற்சாகத்துடனும் நடந்து வந்தது, அவ ருடைய வயதுக்கு அதிகமே. ஸ்ரீமதி சரோ ஜனி தேவி அவருடன் நடக்க முடியாமல் கஷ்டப்பட்டார்.

நர்மதை நதியின் காட்சி உள்ளத் தைக் கவரக்கூடிய நிலையி லிருந்தது. நம்முன்னே புனிதமான பெரிய நர் மதை நதி பெரிய சுழலுடன் கடலை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்தது. நமக்குப் பின்னே செழுமையான நிலங் களும், அநேக மக்கள் குடியிருக்கும் வீடு களும், ஒரு பால் நர்மதை நதியினாலும், மற் றொரு பால் அகழியினாலும் சூழப்பட்ட புரோச்சியின் பழைய கோட்டைமதிலும் காட்சியளித்துக் கொண்டிருந்தன. நதிக் கரையின் ஓரத்தில் ஐந்து நாட்டுப் படகுகள் நிறுத்தி வைக்கப் பட்டிருந்தன. அவைகளுள் ஒன்று மிகவும் அழகாக அலங்கரித்து வைக் கப்பட்டிருந்தது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. அப்படகின் முன் பக்கமும், பின் பக்கமும் பண்டைக் காலத்து இந்திய மாலுமி சாஸ் திரத்தின் மேன்மையை விளக்கும்படியான அழகு வாய்ந்த சித்திர வேலைகள் செய்யப் பட்டிருந்தன. இன்னும் அப்படகு பல வித மான புஷ்பங்களாலும், இலைகளாலும், தேசி யக் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந் தது. இப்படகின் பாய் மரத்திற்கு மேலே பெரிய தேசியக்கொடி பறந்துகொண்டிருந் தது. அப்படகை இயக்குந்தலைவர் கம்பீரமும், வசீகரமுமான தோற்றமும் உடைய ஒரு வயோதிக முஸல்மானவர். அவர் படகோட்டு வதில் வல்லுநர். இத்தகைய படகில் காந்தி யடிகள் எழுந்தருளினர். அவருக்குப் பக்கத் தில் அடிகளின் இயக்கத்திற்குப் பக்கத்துணை வரும், இந்தியாவில் பெண்மைக்கே ஓர் உறை விடமும், அருள் வழியும் முகமும், தம் உயிர்த்துணைவர் விரும்பிச் செல்லும் எத் தகைய இடத்திற்கும் செல்வேன் என்னும் உறுதியோடு கூடிய முகச் சாயலும் உடை யவருமான ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி அம்மையார் வீற்றிருந்தார். இக்காட்சியை நோக்கும்போது, இந்தியர் ஒவ்வொருவருக் கும் பண்டைய காலத்தில் ஸ்ரீ ராமபிரா னும், சீதாதேவியாரும் கான்புக அயோத் தியின் எல்லையைக் கடக்கவேண்டி குகன் படகில் நதியைக் கடந்துசென்ற காட்சி நினை வுக்கு வரும். ஏனைய நான்கு படகுகளிலும் மகாத்மாவின் சேனையாகிய எண்பது தொண்டர்களும் ஏனைய நண்பர்களும் அமர்ந் திருந்தார்கள். படகுகள் புறப்படும்போது சூரியன் மேற்குத் திசையில் மறைந் தான். மகாத்மாவை வழியனுப்பக் கூடி யிருந்த மக்களின் கூட்டத்திடையே எழுந்த "காந்திக்குஜே," "வந்தேமாதரம்," என் னும் இன்னொலிகள் வானைப் பிளந்தன. படகுகள் நதியில் செலுத்தப் பட்டன. இங்கு நதி ஒரு மைல் அகலமுள்ளது. காந்தியடிகள் திருக் கூட்டத்தார் அந்நதி யைக் கடந்து அங்கலேஸ்வருக்கு அன்றைய இரவு 8-30 மணிக்கு வந்து சேர்ந்தனர். இவ் வூர்மக்கள் நதிக்கரையிலேயே வந்திருந்து அடிகளைச் சிறப்பாக வரவேற்று மேளதாளத் துடன் ஊருக்கு அழைத்துச் சென்றார்கள். அன்றிரவு நடந்த ஒரு பெரிய பொதுக்கூட் டத்தில் 20 கிராம உத்தியோகஸ்தர்கள் இராஜினாமா செய்து விட்டார்களென அறி விக்கப்பட்டது. பின்னர் அடிகள் பேசியது வருமாறு:—

"இந்த இராஜினாமாக்கள் விருப்பத்துடன் கொடுக்கப்பட்டனவா, அல்லது வற்புறுத்தத லின்மீது கொடுக்கப்பட்டனவா, அவைகள் கலெக்டருக்கு அனுப்பப்பட்டனவா, புதிய கிராம உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப்பட் டார்களா என்பவைகள் எனக்குத் தெரிய வேண்டும். கிராம உத்தியோகஸ்தர்கள் ராஜீ னாமா செய்வது அரசாங்கத்தின் ஆட்சியே மறைந்து விடுதற்கு அடையாளமாகும். அர சாங்க உத்தியோகஸ்தர்களுக்கு, நாவிதர் முத லியவர் வேலைசெய்யக்கூடாது. தண்ணீர்கூட அவர்களுக்கு எடுத்துக் கொடுக்கக் கூடாது. இராஜினாமா செய்துவிட்டு, அதைத் திரும் பப் பெற்றுக்கொண்டு மீண்டும் உத்தியோ கத்தை ஏற்றுக் கொள்வார்களே யானால், அவர்கள் தேசத் துரோகிகள் எனக் கூறப் படுவார்கள். உப்பு வரியை ஒழிக்க நாம் பாடுபட்டோமானால் சுயராஜ்யத்தைஅடைவ தற்கு நமக்கு ஆற்றல் வந்துவிடும்."

### ஸ்ரீமதி சரோஜினி தேவியும் பத்திரிகை நிருபரும்

26-3-30-ல் ஒரு பத்திரிகை நிருபர் ஸ்ரீமதி சரோஜனி தேவியைப் பேட்டி கண்டு காந்தியடிகள் எப்படி இருக்கிறா ரெனக் கேட்டார். அதற்கு ஸ்ரீமதி சரோ ஜனி, அடிகள் மிகவும் உற்சாகத்துடன் காணப்படுவதாகக் கூறினர். பிறகு நிருபர் "மகாத்மா காந்தி மிகவும் பலஹீனமாக இருக்கிறதாகத் தெரியவில்லையா?" என்று கேட்டார். அதற்கு சரோஜனி தேவியார், "இல்லை, இரண்டு மாதங்களுக்கு முன்னர் அவர் இருந்ததைக் காட்டிலும், இப்போது அவர் மிகவும் நன்றாக இருக்கிறார். உண்மை யில் முன்னர் அவர் உடல்நிலையைக் குறித்து எனக்குக் கவலையிருந்தது. ஆனால் இப் போது அவரை நேரில் கண்டதும் அக்கவலை நீங்கியது" என்று பதிலளித்தார்.

### சஜ்ஜாத்

27-3-30 காலை 9-மணிக்குக் காந்தியடிகள் குழுவினர் சஜ்ஜாத் என்னும் கிராமத்துக்குப் போந்து அங்குள்ள ஒரு மாந்தோப்பில் தங்கி யிருந்தனர். இதுவெகு சொற்பஜனத்தொகை யுடைய ஒரு சிறிய கிராமம். இங்கு மகாத்மா காந்தியின் திருப்படையில் சுரேந் திரர் என்பார் தொண்டராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார். அத்தொண்டர் சபர்மதி ஆசிரமத்தில் தொண்டராக இருந்தவர். பிற் பகல் கூடிய ஒரு பொதுக் கூட்டத்தில் காந்தியடிகள் பேசியது வருமாறு:—

"புரோச் ஜில்லா பிரயாணம் நாளை காலை முடிவடைகிறது. இந்த ஜில்லாவின் உதவி யினால் மாத்திரம் சுயராஜ்யம் அடைய வேண்டுமானால் காலதாமதமாகும். சுயராஜ் யம் அடைவதற்கு வேண்டிய நிபந்தனைகள் முழுமையும் மற்ற ஜில்லாக்களில் அநுஷ் டிக்கப்படவில்லை. இந்த ஜில்லாவில் அந்தக் குறைபாடு இன்னும் அதிகமாகவே யிருக் கிறது. ஈண்டுப் பருத்தி அதிகமாக உற்பத்தி யாயினும், கதர் உற்பத்தியாவது, கதர் தரித் தலாவது ஒன்றுங் கண்டிலேன். மதுபானம் விசேடமாயிருக்கிறது. ஆனால் என் விரி வுரைகளைச் செவிமடுக்க மக்கள் பெருங் கூட்டமாக வருவதும், எனக்கும் என் கூட் டத்தினர்க்கும் மகிழ்ச்சியுடன் உணவளிப்ப துந்தான் நான் அடைந்த திருப்தி. இது வரை செய்யப்படாதிருந்த வேலையை, இப் போது உடனே செய்வீர்களென்று நம்பு கிறேன். நான் தண்டியை நண்ணக்கூடுமா யின், மூன்று அல்லது நான்கு கோட்டை களைத் தகர்த்து விடலாம். நான் தண்டி போய்ச் சேரினும் சேராவிடினும் உப்பு வரி ஒழிக்கப்படும். கூடிய விரைவில் உப்பு விலை குறையும். ஆனால் நான் அத்துடன் திருப்தி யடைந்துவிட மாட்டேன். அடுத்தபடி தகர் க்க வேண்டிய கோட்டை அந்நிய நாட்டுத் துணியாகும். அதனால் ஒவ்வோர் ஆண்டும் 60 கோடி ரூபா மிச்சப்படும். மூன்றாவது கோட்டை மதுபானம். அதை நாம் தகர்த் தோமானால் 25 கோடி ரூபா மிகுதியாகும். இவ்வண்ணம் 91 கோடி மிகுதியாவதுடன், சுயராஜ்யம்பெற மக்களிடை ஒரு போராற் றல் உண்டாகும்."

ஸ்ரீமதி காந்தி 26 3 30 இரவு ஆமதாபாத் துக்குப் புறப்பட்டு விட்டார்.

### மங்ரோல்

27-3-30 இரவு 8-30 மணிக்குக் காந்தியடி கள் திருக்கூட்டத்தார் மங்ரோல் வந்துசேர்ந் தனர். இவர்கள் நடந்து வந்த பாதையின் இருமருங்கிலும் முட்செடிகளும், புதர்களும் இருந்தன. இதனால் இக்கூட்டத்தாருக்குச் சிறிது சிரமம் ஏற்பட்டது. மங்ரோல் ஒரு சிறிய கிராமம். இங்கு இரவு நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் புரோச் ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் டாக்டர் சந்துலால் தேசாய், உப்பு சத்தியாக்கிரகத் துக்காகப் புரோச் ஜில்லாவில் நான்கு இடங் களைக் குறிப்பிட்டுத் தொண்டர்களை அங்கு அனுப்புவதாகக்கூறினர். பிறகு காந்தியடிகள் பேசும்போது, தொண்டர்கள் தங்கள்பலவீனத் தை ஒப்புக்கொள்ளவேண்டு மென்றும், ஆண் டவன் அவர்களுடைய கௌரவத்தைக் காப் பாரென்றும், இன்னும் இரண்டொரு மாதங் களில் உப்பு வரி ஒழிந்துவிடு மென்றும், ஆனால் அந்நியநாட்டுத் துணிகளைப் பகிஷ் காரம் செய்து, குடியை ஒழித்துவிடவேண்டு மென்றும் குறிப்பிட்டார்.

### ரேமா

28-3-30 காலை 8-30 மணிக்குக் காந்தியடி கள் திருக் கூட்டத்தார் மங்ரோல் கிராமத் தைவிட்டு ரேமா என்னும் கிராமத்தை அடைந்தார்கள். புரோச் ஜில்லாவில் காந்தி யடிகள் விஜயஞ் செய்த கடைசி கிராமம் இது தான். இங்கு ஒரு நாவிதர் உள்ளிட்ட 15 தொண்டர்கள் சேர்க்கப்பட்டார்கள். தொண்டரான நாவிதரிடம் மகாத்மா க்ஷவரஞ் செய்து கொண்டார். ஈண்டு ஒரு பொதுக் கூட்டத்தில் அடிகள் உபந்நியசித்த போது, ஒரு தொண்டரிடம் தாம் க்ஷவரஞ் செய்து கொண்டது குறித்துப் பெருமையடைவதாக வும், தேசியப்படையில் தச்சர், கொல்லர், சக்கிலிகள், குப்பைக் காரர்கள் ஆகிய எல்லா விதமான தொழிலாளர்களும் ஆண், பெண், குழந்தை அனைவரும் சேர்ந்து கொள்ள வேண்டு மென்பதாகவும் கூறினர்,

### உம்ரோச்சி

28-3 30 இரவு 9 மணிக்கு மகாத்மாகாந்தி யும், அவர் கூட்டத்தாரும் புரோச் ஜில்லா வைக் கடந்து சூரத் ஜில்லாவிற்குள் நுழைந் தனர். அவர்கள் அன்றிரவு உம்ரோச்சி என் னும் கிராமத்தில் தங்கினர். அடிகள் ரேமாவி லிருந்து சுமார் ஏழு மைல் தூரம் நடந்து வந்தபோதிலும், அவர் புன்னகை தவழ்ந்த முகத்துடன் எப்போதும்போல் உற்சாக மாகவே காணப்பட்டார். இந்த ஜில்லாவில் தான் பர்தோலி தாலுக்கா இருக்கிறது. ஜனங்களும் மிகுந்த உற்சாகமாகவே காணப் பட்டார்கள். அன்றிரவு நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் 32 கிராம முனிசிப்புகளும், ஒரு தலையாரியும் இராஜினாமாசெய்தது அறி விக்கப்பட்டது. பின்னர் அடிகள் நிகழ்த் திய சொற்பொழிவு வருமாறு:—"ஸ்ரீமான் வல்லபாய் படேலுக்கு மிகவும் விருப்பமான ஜில்லாவிற்குள் நான் நுழைந்துள்ளேன். அஃது உண்மையாயிருப்பின், இந்த ஜில்லா வில் நான் பெரிய உதவிகளை எதிர்நோக்கு கிறேன். எனவே இந்த ஜில்லாவிற்குப் பொறுப்பு அதிகமாகிறது. போலீஸ் படேல் கள் எல்லோரும் இராஜினாமா செய்வதுமாத் திரமின்றி, எல்லாத் தலையாரிகளும் இராஜி னாமா செய்ய வேண்டும். உப்புவரியை ரத்து செய்வதற்கான போராட்டத்தை வெற்றி பெற நடத்திவைப்பதே இந்தப் பிரயாணத் தின் கருத்தாகும். நான் இச்சமயத்தைக் கைவிட்டுச் சும்மா உட்கார்ந்திருப்பின் என் னைத் தேசத்துரோகியென்று அழைத்திருப் பார்கள். என்னுடைய மக்களிடம் அவநம் பிக்கையை உண்டாக்க எனக்கு உரிமை யில்லை. இப்பொழுது பர்தோலி தன் அஹிம்சா தர்மத்தினால் என்னைப் பிரமிக்கச் செய்து விட்டது. இன்றுங்கூட நான் முன் எச்சரிக்கையுடன் இருக்கிறேன். நான் இந் தியருக்கு எத்துணை நண்பனோ, அத்துணை பிரிட்டிஷாருக்கும் நண்பன். எனவே இந்த உப்பு வரி உடனே ஒழிய வேண்டுமெனக் கோருகிறேன்."

### எர்தான்

29-3-30 காலை காந்தியடிகள் திருக்கூட் டத்தார் உம்ரோச்சியி லிருந்து எர்தான் அடைந்தனர். அடிகள் இங்கு ஜனங்கள் மத்தியில் பேசிக்கொண்டிருந்தபோது, நூற் றலின் விசேஷத்தைத் தெரிந்துகொள்ளும் பொருட்டுத் தக்ளியில் நூல் நூற்றுக் கொண்டே யிருந்தார். பின்னர் அவர் கிராம உத்தியோகஸ்தர்களின் இராஜினாமாவைக் குறித்துப் பேசுகையில், போலீஸ் படேல் கள் கிராமங்களுக்கு விஜயஞ் செய்யும் எந்த அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கும் வர

(12-ம் பக்கம் பார்க்க)

# பண்டித மாளவியாவுக்கு ஒரு பகிரங்கக் கடிதம்

## காந்தியடிகளைச் சேர வேண்டுகோள்

இந்தியா சட்டசபை அங்கத்தினர்களான ஸ்ரீமான்கள் சத்தியேந்திர சந்திர மித்திரா, பி. தாஸ், தாகூர்தாஸ் பார்க்கவர், நீலகண்டதாஸ், முக்தார் சிங், அமரநாததத்தர், ரங்க விஹாரிலால், ஆகியோர் சேர்ந்து பண்டித மதன்மோகன மாளவியாவுக்கு ஒரு பகிரங்கக் கடிதத்தை அனுப்பியிருக்கின்றனர். அதன் சாரம் வருமாறு :—

தேசியப் போராட்டத்தின் நெருக்கடியான தற்போதைய நிலையில் நீங்கள் ஸர் தேஜ்பகதூர்சாப்ருவினால் கூட்டப்பட்ட சர்வகட்சி மகாநாட்டில் கலந்துகொள்ளக் கூடாதென்பதற்காகவே இந்தப் பகிரங்கக் கடிதத்தை உங்களுக்கு எழுதலானோம். காந்தியடிகள் சட்டமறுப்புத் தொடங்க முனைந்துவிட்டார். அவர் வெற்றியடைய வேண்டுமென்று தேசத்தார் விரும்புகின்றனர். நாட்டின் கவனமனைத்தும் அவர் இயக்கத்திலேயே திரும்பி யிருக்கிறது. இந்த விஷயத்தில் காந்தியடிகளுக்கும் உங்களுக்கும் அபிப்பிராய பேத மிருக்கலாம். ஆனால் அவர் கொண்டுள்ள நோக்கத்தினின்று நீங்கள் மாறுபட முடியாது. பிறப்புரிமையான சுயராஜ்யத்தைப் பெறுவதற்கும், நாம் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கும் தீங்குகளினின்று நிவர்த்தியாவதற்கும் சாத்வீக சட்டமறுப்பு நியாயமான, சட்ட வரம்புக்குட்பட்ட ஓர் ஆயுதம் என்பதை நீங்கள் மறுக்கமுடியாது. மற்றும், அஹிம்சா தர்மத்தை அடிப்படையாகக் கொண்ட சட்ட மறுப்பு இயக்கத்திற்கு மகாத்மா காந்தியைத் தவிர வேறு தலைவர் இல்லை யென்பதையும் நீங்கள் அங்கீகரிக்கவேண்டும். மகாத்மா காந்தி தீவிரமாகச் சட்ட மறுப்பு இயக்கத்தில் இறங்கி விட்ட இச்சமயத்தில், அதே மாதிரியில்லா விட்டாலும் அதை அநுசரிக்கக் கூடிய ஓர் இயக்கத்தை நீங்கள் தொடங்க வேண்டுமென்று தேசம் உங்களை எதிர்பார்க்கிறது. உதாரணமாக பிரிட்டிஷ் சாமான் பகிஷ்கார இயக்கத்தை நீங்கள் தீவிரமாக ஆரம்பித்து நடத்தலாம். ஸர் தேஜ் பகதூர் சாப்ருவின் சர்வகட்சி மகாநாட்டில் நீங்களும் உங்களைப் போன்றவர்களும் கலந்து கொள்வதால், தேசத்தின் கவனம் அம் மகாநாட்டில் சிறிதளவு செல்லும்படியாகிறது. தேசத்தின் நன்மையை விரும்பும் எவரும், காந்தியடிகளின் முயற்சிவெற்றிபெற வேண்டுமென்று விரும்புகின்றனர். ஆனால், சர்தார் வல்லபாய் படேல் கைது செய்யப்பட்டதைக் குறித்து நீங்கள் சட்டசபையில் கண்டனஞ் செய்த போது உங்களுக்குத் துணை யில்லாத பலருடன் நீங்கள் மேற்படி சாப்ரு சர்வகட்சி மகாநாட்டில் கலந்துழைப்பதால், பொது ஜனங்களுடைய மனதில் ஒரு தப்பான எண்ணம் உண்டாகி விடுகிறது. தவிர, எந்த உணர்ச்சியை உண்டாக்க மகாத்மா காந்தி முயன்று கொண்டிருக்கிறாரோ அந்த உணர்ச்சி பொது ஜனங்களிடை உண்டாகாமலிருப்பதற்குக் காரணமா யிருக்கிறது.

* * *

காந்தியடிகளின் இயக்கத்தை மனப்பூர்வமாக ஆதரியாதவர்கள் கூட, அரசாங்கத்தார் தீவிரமான அடக்குமுறையில் இறங்க விருப்பதை அங்கீகரிப்பதற்கில்லை. ஆதலின், இராஜப் பிரதிநிதி, பிரிட்டிஷ் தொழிற்கட்சி அரசாங்கம் இவைகளின் அங்கீகாரம் பெற்றோ பெறாமலோ, அதிகார வர்க்கத்தினர் எடுத்துக் கொள்ளும் அடக்கு முறைகளை நாம் ஜாக்கிரதையுடன் கவனித்துக் கொண்டுவரவேண்டும்; மற்றும் அடக்கு முறைஎழாதபடிபார்த்துக்கொள்ளவேண்டும். ஒருபிரிவார், பலாத்காரமற்ற போராட்டத்திலிறங்கி வேலை செய்யும்போதும், மற்றொரு பிரிவார் பிரிட்டிஷ் சாமான் பகிஷ்காரத்திலும், அடக்கு முறையைத் தீவிரமாக எதிர்த்து நிற்பதிலும் முனைந்து வேலை செய்யும் போதும், உங்களுக்கு மேற்படி சர்வகட்சி மகாநாடு போன்றவைகளில் மனது செல்லாது என்று நாங்கள் நிச்சயமாக நம்புகிறோம். வேற்றுமைகளைப் பற்றி வாதஞ் செய்ய இது காலமல்ல. ஏதேனும் வேற்றுமைகள் இருந்த போதிலும் அவைகளைத் தற்போது அடக்கிக்கொண்டு செல்ல வேண்டும். சுதந்திரம் பெறுவதற்காகத் தற்போது நடைபெறும் போராட்டத்தில், ஒன்று மகாத்மா காந்தியின் கொடியின் கீழாவது சென்று சேர்ந்து கொள்ளவேண்டும்; அல்லது நாங்கள் விரும்பும் வண்ணம் நீங்கள் தொடங்க வேண்டிய பிரிட்டிஷ் சாமான் பகிஷ்கார இயக்கக் கொடியின் கீழாவது சேர்ந்துழைக்க வேண்டும். முற்போக்குடையவர்களும் பிற்போக்குடையவர்களும் சேர்ந்து செய்துகொள்ளும் முடிவுகள், ஒரு சாராருக்கு அதிருப்தியை விளைவிக்கக்கூடியனவாகவே இருக்கும். அவைகளிலேயே ஜனங்களின் கவனஞ்சென்றுவிடும். அதனால் தேசத்திற்குத் தீங்கேஉண்டாகும். சர்வகட்சி மகாநாட்டைத் தற்போது கூட்டுவதால் அத்தப்பயனே உண்டாகும். ஆதலின் சாப்ரு மகாநாட்டை இன்னும் குறைந்தது ஆறு மாதத்திற்காவது தள்ளிவைக்கும்படி நீங்கள் செய்வீர்களென்று எதிர்பார்க்கிறோம். மற்றும், மகாத்மா காந்தியின் இயக்கத்திலோ, அல்லது பிரிட்டிஷ்சாமான் பகிஷ்கார இயக்கத்திலோ சேர்வது ஜனங்களின் கடமையென்பதை நீங்கள் பகிரங்கமாகத் தெரிவிப்பீர்களென்று நம்புகிறோம். கூடிய விரைவில் எங்களுடைய இந்த வேண்டுகோளை நிறைவேற்றி வைக்கவேண்டு மென்று கேட்டுக் கொள்கிறோம்.

# மகாத்மா காந்தி படம்

## தடுக்கப்பட்டதைப்பற்றி அங்கத்தினர் கண்டனம்

மகாத்மா காந்தி தமது சத்தியாக்கிரகப் படையுடன் 12-3-30-ல் ஆமதாபாத்திலிருந்து புறப்பட்டபோது பல சினிமா கம்பெனிகள் கூட இருந்து பல படங்களை எடுத்தன வென்பதையும், இவைகளைப் பொதுஜனங்களுக்குக் காட்டக்கூடாதென்று பம்பாய், ஐக்கிய மாகாணம், மத்திய மாகாணம், பஞ்சாப், சென்னை முதலிய மாகாண அரசாங்கங்கள் தடுத்துவிட்டன வென்பதையும் நேயர்கள் அறிவார்கள். இதைப்பற்றிச் சென்னைச் சட்ட சபையில் ஓர் அவசரப் பிரேரணை கொண்டுவரப்பட்டது. அதுகாலை, அங்கத்தினரிற் சிலர் பேசிய வற்றிலிருந்து சில பாகங்களைப் பொறுக்கிக் கீழே தருகிறோம்.

ஜனாப் ஹமீது கான்:— மகாத்மா காந்தியின் சட்ட மறுப்புப் பிரயாணத்தைப்பற்றிய எல்லா விவரங்களும் எல்லாப்பத்திரிகைகளிலும் வெளியா யிருக்கின்றன. இவைகள் சம்பந்தமான படங்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன. மகாத்மா காந்தியின் சொற்பொழிவுகளும், மிகப் பெரிய தலையங்கங்களுடன் வெளியிடப்பட்டிருக்கின்றன. இப்படியெல்லா மிருக்கும் போது, சினிமா படங்களை அரசாங்கத்தார் தடை செய்ததன் நோக்கம் என்ன வென்பது புலனாக வில்லை. * * * * மகாத்மா காந்தி சம்பந்தமான விஷயங்கள் பொது ஜனங்களுக்கு அதிசமாகத் தெரியக்கூடா தென்பது அரசாங்கத்தார் விருப்பமானால், அவருடைய தடை உத்தரவினால், மேற்படி விஷயங்களுக்கு இன்னும் அதிக விளம்பரங்கள் ஏற்பட்டிருக்கின்றன வென்பதை அவர் உணரா வில்லையா? சினிமா படத்தைச் சென்று பார்ப்பவரெல்லாரும் உப்புச் சட்டத்தை மீறத் தொடங்கி விடுவர் என்று அரசாங்கத்தார் கருதுகின்றாரா?

* * *

ஸ்ரீமான் ஹரிசர்வோத்தம ராவ்:—காந்தியடிகளின் பிரயாண விவரங்களை ஹோம் அங்கத்தினர் படித்துக் கொண்டு வருகிறாரா வென்பதையும் இப்பொழுது தடுக்கப்பட்ட சினிமா படங்கள் எத்தகையனவா யிருக்கின்றனவென்பதை அவர் தெரிந்துகொண்டாரா வென்பதையும் நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். காந்தி யாத்திரை சம்பந்தமான இந்தப்படங்களால் ஜனங்கள் கெட்டுப் போய்விடுவார்கள் என்று நினைக்க அதிகார வர்க்கத்தினர்கூடத் துணியமாட்டார். இந்தப் படங்களைத் தடுத்ததன் மூலம் அரசாங்கத்தார் தேசத்திற்குப் பெரிய நன்மையையே செய்தவராகிறார். ஏனெனில் ஜனங்களுக்கு இதனால் அதிக உணர்ச்சி உண்டாகும். ஜனங்களுடைய எண்ணங்களையும், கொள்கைகளையும் கட்டுப்படுத்த அரசாங்கத்தாரால் முடியுமா?

* * *

ஸ்ரீமான் எல். கே. துளசிராம்:—சென்னை அரசாங்கத்தார் இந்தச் சினிமா படங்களை ஏன் தடை செய்யவேண்டும்? அரசாங்கத்தாருக்குத் தைரியமிருந்தால் அவர், மகாத்மா காந்தியை எதிர்த்துப் போராடலா மல்லவா? உலகத்தாரெல்லாராலும் போற்றப்படும் ஒரு பெரியார், இராமரும் சீதையும்போல், ஒரு பிரயாணத்தைத் தொடங்கி யிருக்கின்றனர். இவருடைய பிரயாணத்தை இந்தியர் அனைவரும் மிகுந்த ஆவலுடன் கவனித்துக் கொண்டு வருகின்றனர். ஸ்திரீ புருஷர்கள் அடங்க அனைவரும் காந்தியடிகள் தரிசனத்திற்காக வெளியூர்களி லிருந்து வந்துகொண்டிருக்கிறார்கள். ஒரு சிறிய தேசமாகிய இங்கிலாந்து, பெரிய தேசமாகிய இந்தியா ஒன்றைஅஹிம்சாதர்மப்போராட்டத்தில்எதிர்த்து நிற்கிறது. எப்படி யிருந்தபோதிலும் 1940-ம் ஆண்டில் இந்தியா சுயேச்சை பெறும் என்பது எனது ஜோதிடம். * * * ஹோம் அங்கத்தினர் இந்தப் படங்களைத் தடுத்துவிட்டால், அறிவையும் வீரத்தையும் தடுத்துவிட்டவ ராகிறார்.

* * *

ஸ்ரீமான் ஹரிச்சந்திரடு:—சினிமா காட்சிகளில் பல ஆபாசமான படங்கள் காண்பிக்கப்படுகின்றன. அவைகளை யெல்லாம் அரசாங்கத்தார் தடை செய்ய வில்லை. காந்தியடிகளின் பிரயாண சம்பந்தமான சினிமா படங்கள் ஆபத்தை விளை விப்பனவென்று அரசாங்கத்தார் கருதுவாரானால், அவருக்கு யோசனையே யில்லை யென்று நான் கூறுவேன். மகாத்மா காந்தியையும் அவருடைய தொண்டர் படையையும் எதிர்க்க வேண்டியானால், அவருடைய சட்ட மறுப்பு இயக்கத்தையே அரசாங்கத்தார் நிறுத்த வேண்டும். அதை விடுத்து, இந்தப்படங்களை ஏன் தடை செய்ய வேண்டும்?

* * *

ஸ்ரீமான் ஆர். சிவாசன்:—தென்னாப்பிரிக்காவில் மகாத்மா காந்தி நிகழ்த்திய செயல்களைப்பற்றி எனக்குநேரே தெரியும். அங்குள்ள ஜனங்களுக்கு அவர் எவ்வளவு துன்பத்தைக் கொடுத்தார் என்பதை நான் அறிவேன். இது வரை, இந்தியாவில் உள்ள எந்த ஏழையும் உப்பைப்பற்றிக் குறை கூறவில்லை. இதை ஸ்ரீமான் காந்தி, தாமே தம் தலைமேல் போட்டுக் கொண்டார். இப்பொழுது தடுக்கப்பட்டுள்ள சினிமா படங்களைப் பொது ஜனங்களுக்குக் காண்பித்தால் அதனால் விபரீத பலன்களே உண்டாகும். ஆதலின் அரசாங்கத்தார் இப் படங்களைத் தடைசெய்தது புத்திசாலித்தனமேயாகும்.

* * *

ஸ்ரீமான் பி. முனிசாமி நாயுடு:—காந்தியடிகளின் பிரயாணத்தைப் பற்றிய படங்களைப் பார்த்து ஜனங்களுக்கு உண்டாகும் உணர்ச்சியைத் தடுக்கவேண்டு மென்பது அரசாங்கத்தார் விருப்பமானால் அதற்கு இந்தப் படங்களைத் தடுப்பது சரியான உபாயமாகாது. ஆனால் பாமர ஜனங்களிடையே பரவியிருக்கும் அதிருப்தியைப் போக்க வேண்டும். பாமர ஜனங்கள் பட்டினியால் வாடி வருந்துகிறார்கள். என்ன செய்வதென்று அவர்களுக்குத் தெரியவில்லை. ஆதலின், ஜனங்களின் குறையைப்போக்கி அவர்களுடையநிலையை உயர்த்த வேண்டுமென்று அரசாங்கத்தார் உண்மையிலேயே ஆவல் கொண்டால், ஜனங்களுடைய வறுமையை முதலில் போக்கவேண்டும். அவர்களுக்கு வேறு பல சௌகரியங்களை அளிக்க வேண்டும்.

* * *

ஸ்ரீமான் அ. அரங்கநாத முதலியார்:— இந்தியாவின் தற்போதைய தாழ்ந்த நிலையைக் குறித்து எவரும் வருந்தாமலில்லை. இந்த நாட்டின் நன்மையில் நாட்டங்கொள்ளாத ஒரு சிலருக்கே பொறுப்பா யிருக்கக்கூடிய அரசாங்க முறை இங்கு நடைபெற்று வருகிறது. இந்த நாட்டு ஜனங்களுக்குத் தாங்கள் செய்யவேண்டிய கடமையையும் பொறுப்பையும் அரசாங்கத்தார் உணர்ந்தால் இந்தத் தடை முறைகள் யாவும் அநாவசியமாகவே இருக்கும். அதை விடுத்து, தேசீய எழுச்சியை, சினிமா படங்களைத் தடுப்பதன் மூலமாகத் தகைவது ஆச்சரியமா யிருக்கிறது. சர்வகட்சி மகாநாட்டின் பயனாக ஒன்றும் விளையா விட்டால், நம்மில் பலரும் காந்தியடிகள் முறையையேஅநுஷ்டிக்க வேண்டி யிருக்கும்.

* * *

ஹோம் அங்கத்தினர்:— இப்பொழுது தடுக்கப்பட்டுள்ள சினிமா படம் சட்ட மறுப்பு இயக்கத்தின் விளம்பரமேயாகும். உப்புச் சட்டத்தை மீறும்படி ஜனங்களைத் தூண்டுவதே இப்படங்களின் நோக்கம். அப்படியிருக்க, சட்டத்தையும் ஒழுங்கையும் பாதுகாக்கும் பொறுப்புடைய அரசாங்கத்தார் இதைக் கவனியாமலிருக்க முடியாது. பாமர ஜனங்கள் இந்தப் படங்களைப் பார்ப்பார்களானால், தங்களைத் தெரியாமலே, உப்புச் சட்டத்தை மீற வேண்டு மென்ற உணர்ச்சியைப் பெறுவார்கள். இதனாலேயே அரசாங்கத்தார் இந்தப் படங்களைத் தடை செய்தனர்.

## தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் இப்போதைய உத்தியோகஸ்தர்களில் பெரும்பாலோர்ராஜினாமா செய்துவிட்டதால்ஏற்பட்ட காலி ஸ்தானங்களைப் பூர்த்தி செய்ய ஏப்ரல் முதல் வாரத்தில் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி கூடுமென்று தெரிகிறது. கூட்டம் எங்கு நடந்தாலும் எல்லா அங்கத்தினர்களும் சட்டமறுப்பில் ஊக்கமுடைய மற்றவர்களும் அக்கூட்டத்திற்குப் போந்து எல்லா நண்பர்களுடனும் ஆலோசித்துத் தமிழ்நாட்டின் நோக்கத்தையும் செய்யவேண்டிய வேலையின் திட்டங்களையும் முடிவு செய்வார்களென நம்புகிறேன் என்ற ஸ்ரீமான் ச. இராஜகோபாலாச்சாரியார் எழுதுகிறார்.

# அகில இந்திய காங்கிரஸ் கூட்டம்

## காந்தியடிகளின் யோசனைகள்

சென்ற வாரத்து "யங் இந்தியா" பத்திரிகையில் மகாத்மா காந்தி எழுதியுள்ள ஒரு கட்டுரையின் சாரம் வருமாறு :—

ஆமதாபாத்தில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கூட்டத்தில் நிறைவேற்றப் பட்ட தீர்மானம், நான் தண்டி போய்ச் சேரும் வரையில் கைது செய்யப்படாம லிருந்தால், நாடெங்கணும் சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்க உத்தரவு செய்ய எனக்கு அதிகாரமளித்திருக்கிறது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி மிகுந்த ஜாக்கிரதையுடன் நடந்துகொண்டு வர விரும்புகிறது. நான் கைது செய்யப்பட்டால் அதற்காகச் சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்துவது அபாயகரமானதாகும். 6-4-30-ல் தேசமெங்கும் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கலாமென்று நான் கருதுகிறேன். அன்றே தேசீயவாரத்தின் ஆரம்ப தினம். 1919-ம் ஆண்டில் இதே நாளிலேயே சத்தியாக்கிரகம் தொடங்கப்பட்டது. அவ்வாண்டில், மேற்கண்ட நாள் தொடங்கி ஒரு வாரம் வரை பல துர்ச்சம்பவங்கள்நிகழ்ந்துஇறுதியில்ஜலியன்வாலாபாக் படுகொலையில் முடிந்தது. ஆண்டவனருளால் 5-4-30-ல் நான் தண்டி போய்ச் சேர்க்கூடும். ஆதலின் ஏப்ரல் ஆறுந்தேதியே சத்தியாக்கிரகம் தொடங்குவதற்குச் சரியான நாளாகும். அதுவரை தொண்டர்கள் காத்திருக்க வேண்டும். ஆனால், அதற்குள் எல்லா விதமான ஏற்பாடுகளையும் செய்து கொள்ளலாம்.

சட்ட மறுப்பை ஆரம்பிக்கலாமென்று நான் உத்தரவு கொடுத்து விட்டதனால், அதற்காக, தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்ளாத எந்த மாகாணமும் அல்லது எந்த ஜில்லாவும் சட்ட மறுப்பைத் தொடங்க வேண்டுமென்பது அவசியமில்லை. என்னிடத்திலோ, அல்லது என்னைச் சூழ்ந்துள்ளவரிடத்திலோ நம்பிக்கை யில்லாவிட்டால் நான் விரைந்து காரியங்களைத் தொடங்கி விடமாட்டேன். பொதுஜன சட்ட மறுப்பைத் தொடங்க வேண்டுமென்ற ஆவல் அனைவருக்கும் இருக்கிறது. அந்த இயக்கத்தை நாமே உண்டுபண்ண முடியாது. அது வெற்றியடைய வேண்டுமானால் அஃது இயற்கையாகவே உண்டாவதாயிருக்க வேண்டும். சரியானபடி நாம் தேசத்தைப் பக்குவப்படுத்தி வையாவிட்டால், பொதுஜனங்கள் இந்த இயக்கத்திற்கு ஆதரவு நல்க மாட்டார்கள். பலாத்கார முண்டாகாதபடி நாம் அதிக ஜாக்கிரதையா யிருக்க வேண்டும். இம்முறை சட்ட மறுப்பு தொடங்கப் பட்டு விட்டால், இடையே பலாத்காரம் நேர்ந்த போதிலும் அதனை நிறுத்தப் போவதில்லை என்று நான் கூறி யிருந்த போதிலும், நாமே பலாத்காரத்தில் ஈடுபட்டுவிட்டால், அந்த இயக்கத்தின் முற்போக்குத் தடைப்படும் என்பதில் ஐயமில்லை. எதிரிடையான இரண்டு சக்திகள் சேர்ந்துழைக்க முடியாது. பலாத்காரத்தை ஒழித்து, அஹிம்சையை நிலைநாட்டவும், துவேஷத்திற்குப்பதில் அன்பைச் சிறப்பிக்கவுமே சாத்வீக சட்டமறுப்பு இயக்கம் தொடங்கப் பட்டது. பலாத்காரம் ஏற்பட்ட போதிலும் சட்டமறுப்பு இயக்கம் நிறுத்தப்பட மாட்டாது என்று கூறப்பட்டதன் பொருள் என்னவென்றால் பலாத்காரம் ஏதேனும் எழுந்தால், அதனை அடக்கும் முயற்சியில் அஹிம்சா தர்ம வாதிகள் மரித்துப் போகவும் சித்தமா யிருக்கவேண்டும். அரசாங்கத்தாரால் நிகழ்த்தப்படும் பலாத்கார சம்பவங்களானாலும், தனிப்பட்டவர்களால் நிகழ்த்தப்படும் பலாத்கார சம்பவங்களானாலும், அவைகளை அஹிம்சா தர்மவாதிகள் சும்மா யிருந்து பார்த்துக்கொண் டிருக்கக் கூடாது. ஆதலின் அந்தந்தமாகாணத்திலுள்ள தொண்டர்கள், எல்லாவித முன்னேற்பாடுகளையும் சரியானபடி செய்துகொண்டு பிறகு போரில் இறங்குவார்களாக.

### வேறு சட்டங்களை மீறி நடத்தல்

வேறு சில சட்டங்களையும் மீறி நடக்க வேண்டுமென்ற பேச்சு சிலரிடை பேசப் பட்டு வருகிறது. இவ் விஷயத்தில் எனக்கு அதிக சிரத்தை உண்டாகவில்லை. உப்புச் சட்டத்தை மீறும் விஷயத்திலேயே நமது கவனத்தைச் செலுத்துவது நல்லதென்று எனக்குப் புலப்படுகிறது. எங்கும் உப்பளங்களை நாம் அதிகமாகப் பார்க்கிறோம். விற்பனை செய்வதற்காக உப்பு தயாரிக்கப்பட வேண்டுமென்பதுநமதுநோக்கமன்று. ஆனால் உப்பு உற்பத்தி செய்வதன் மூலமாக உப்புச் சட்டங்களை மீற வேண்டுமென்பதே நமது நோக்கம். என்னுடைய அபிப்பிராயத்தில், மதுபானக் கடைகள், அபினிக் கிடங்குகள், அந்நியத்துணிக் கடைகள் இவைகளில் மறியல் செய்வது நல்லதென்று எனக்குப் [illegible]கிறது. மறியல் செய்வது சட்ட விரோதமன்று. ஆனால் எல்லா மறியல் வேலைகளையும் அரசாங்கத்தார் அடக்கி விடுவர் என்று பழைய அநுபவத்தினால் தெரிகிறது. ஆனால் இதைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. நாம் இவைகளையெல்லாம் எதிர்த்தே தீர்வோம். ஆனால் மதுபானக் கடைக்காரர்கள், அந்நியத் துணிகளை விற்பனை செய்வோர் ஆகிய இவர்களுடைய கோபத்துக்கே சிறிது அஞ்சவேண்டி யிருக்கிறது. இந்த இரண்டு விஷயங்களைக் குறித்தும் பொதுஜன அபிப்பிராயம் திரண்டெழ வேண்டும். இவைகளின் தீமைகளைப்பற்றித் தொண்டர்கள் தீவிரமான பிரசாரஞ் செய்ய வேண்டும்.

இந்த இரண்டு தீமைகளையும் என்றாவது ஒருநாள் நாம் ஒழித்தே தீரவேண்டும். ஆதலால், அதிக ஆபத்தின்றி, எங்கெங்கு மறியல் வேலை தொடங்கலாமோ அங்கெல்லாம் மறியல் வேலையைத் தொடங்க வேண்டு மென்று தொண்டர்களைக் கேட்டுக் கொள்கிறேன். ஆனால் ஏதேனும் ஒருவிதமான சட்டமறுப்பைத் தொடங்க வேண்டுமே யென்பதற்காக இந்த மறியல் வேலையைத் தொடங்கக் கூடாது. தற்போது, உப்புவரி விஷயத்திலேயே நமது கவனத்தைச் செலுத்துவது நல்லது. ஏப்ரல் மாதம் ஆறுந் தேதிக்குள் தொண்டர்கள் தங்களைச் சித்தப் படுத்திக் கொள்வார்களாக.

# சட்டமறுப்புத் தொண்டர்களுக்கு

ஸ்ரீமான் சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் பின்வருமாறு எழுதுகிறார் :—

## I

தமிழ் நாட்டில் சத்தியாக்கிரஹப் படைக்குத் தொண்டர்கள் விரைவாகச் சேர்ந்துவருகிறார்கள். கூடிய விரைவில் போர் துவங்கிவிட வேண்டுமென்று காந்தியடிகள் கடைசியாகத் தெரிவித்திருக்கிற படியால், பல ஜில்லாக்களின் வழியாகத் தொண்டர் படையைக் கால் நடையாக அழைத்துச் செல்லும் யோசனை கைவிடப்பட்டது. உப்பு வரிப் போர் தஞ்சாவூர் ஜில்லாவில் நடைபெறப் போவதை முன்னிட்டு அந்த ஜில்லாவில் மட்டும் தொண்டர் படை கால் நடையாகப் பிரயாணம் செய்வதென்று தீர்மானித்திருக்கிறோம்.

ஐம்பது தொண்டர்கள் அடங்கிய சத்தியாக்கிரஹ முதல் படை தமிழ் வருஷப் பிறப்பு தினமாகிய ஏப்ரல்மீ 13உ [ஜாலியன் வாலாபாக் நாளன்று] திரிசிராப்பள்ளியிலிருந்து வேதாரண்யத்துக்குப் புறப்படும். தொண்டர்கள் காலையில் ஐந்துமைலும், மாலையில் ஐந்து மைலும் நடந்து சராசரி தினம் பத்து மைல் பிரயாணம் செய்வார்கள். வழியில் தஞ்சாவூர், கும்பகோணம், மன்னார்குடி, திருத்தருப் பூண்டி முதலிய பட்டணங்களிலும் மற்றும் பல கிராமங்களிலும் தங்கிச் செல்வார்கள்.

முதற்படைக்கு எடுக்கப்பட்ட தொண்டர்களுக்கு, நேரகவோ, உள்ளூர்த்தலைவர்கள் மூலமோ தெரிவிக்கப்படும். அவர்கள் 12உ சாயங்காலமே திருச்சிக்கு வந்து சேரவேண்டும். 13உ அதிகாலையில் பிரயாணம் ஆரம்பமாகிவிடும்.

தொண்டர்கள் பிரயாணத்தின் போது கிராம சுகாதாரத்துக்குரிய வேலை செய்து கொண்டு போவார்கள். வழியிலுள்ள கிராமங்களைப் பெருக்கிச் சுத்தம் செய்ய உத்தேசித்திருக்கிறோம். கிராம வாசிகள் தொண்டர்களுக்கு உணவு முதலிய வசதிகள் அளிப்பதற்குப் பதிலாக இந்தத் தொண்டு நாம் செய்ய வேண்டும்.

தொண்டர் ஒவ்வொருவரும் தத்தம் உபயோகத்திற்கு வேண்டிய சாமான்கள் கொண்டுவரவேண்டும். ஆனால் அவரவர்கள் சுலபமாய்த் தூக்கிச் செல்லக் கூடிய மூட்டையாயிருக்க வேண்டும். படுப்பதற்கும், மாற்றி உடுத்திக் கொள்வதற்கும் சில வேஷ்டிகள், தண்ணீருக்குச் சிறு செம்பு ஒன்று இவையே போதும். அவரவர் சாதாரணமாய் அணிந்து கொள்ளும் உடையே இப்பிரயாணத்திலும் அணிந்து கொள்ளலாம். தனி உடை வேண்டியதில்லை.

உறுதி மொழியில் கையெழுத்திட்டிருக்கும் மற்றத் தொண்டர்கள் எல்லாரும் எந்த நிமிஷமும் கிளம்புவதற்குச் சித்தமாயிருக்க வேண்டும். ஆனால் தகவல் கிடைக்கும்வரை அவர்கள் புறப்படக்கூடாது.

போரில் சேரவிரும்பும் மற்றையோர் உடனே தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ள வேண்டும். அஹிம்சா தர்மத்தில் நம்பிக்கையுடன், எவ்வளவு துன்பங்கள் நேர்ந்தாலும் சகித்துக்கொண்டு கடைசிவரை தைரியமாய் நிற்க உறுதி கொண்டவர்களே போரில் சேரவேண்டும்.

உறுதி மொழிப்பத்திரமும், மற்றத் தகவல்களும் எல்லா ஊர்களிலுமுள்ள காங்கிரஸ் கமிட்டிகளிலும், பின் வருவோரிடமும் பெற்றுக் கொள்ளலாம் :—

(1) மாகாண காங்கிரஸ் கமிட்டி ஆபீஸ், மகாஜன சபை, சென்னை.

(2) யுவர் சங்கம் அரசியல் பிரிவு, இந்திய ஊழியச் சங்கக் கட்டடம், இராயப்பேட்டை, சென்னை.

ஸ்ரீமான்கள்

(3) டாக்டர் பி. சீனிவாசன், காஞ்சிபுரம்.

(4) என். அண்ணாமலைப் பிள்ளை, திருவண்ணாமலை.

(5) வி. வி. இராஜகோபாலாச்சாரியார், வேலூர்.

6. எஸ். இளையாழ்வார், கள்ளக்குறிச்சி.

7. சி.எஸ். சுவாமிநாதசெட்டியார், சீகாழி.

8. பந்துலு ஐயர், கும்பகோணம்.

9. டாக்டர் முத்துகிருஷ்ண ஐயர், மன்னார்குடி.

10. டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், திருச்சி.

11. ஏ. வேதரத்தினம் பிள்ளை, வேதாரணியம்.

12. என். ஹாலாஸ்யம், புத்தூர், திருச்சி.

13. ஏ. வைத்திநாதய்யர், மதுரை.

14. தி. ரா. மகாதேவய்யர், திண்டுக்கல்.

15. பொ. திரிகூடசுந்தரம் பிள்ளை, அமராவதி புதூர், காரைக்குடி.

16. கே. சுப்பிரமண்யம், கோயமுத்தூர்.

17. பி. எஸ். குமாரசாமி ராஜா, இராஜபாளையம்.

18. கந்தசாமிப் பிள்ளை, காங்கிரஸ்கமிட்டி, தூத்துக்குடி.

19. வி. எஸ். சம்பத்துசெட்டியார், கடைத் தெரு, சேலம்.

## II

## தமிழ் நாட்டாருக்கு

மகாத்மாஜியை சிறைப்படுத்தலாமாவேண்டாமா என்று அரசாங்கத்தார் இன்னும் யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த அவகாசத்தை நாம் செவ்வனே பயன்படுத்திக் கொள்வது கடமையாகும். சீக்கிரத்தில் அதாவது ஏப்ரல்மீ 5உ தலைவர் கடற்கரை சேர்வார். மறுநாள் உப்புச்சட்டத்தை மீறுவார். தேசத்தில் அனைவரும் சாத்வீகப்போரில் சேருமாறு கட்டளையுமிடுவார்.

தமிழ் நாட்டிலும் ஏராளமான வீரர்கள் போரில் சேர ஆயத்தமாயிருக்கிறார்கள். அவர்களைத் திரட்டிப் போருக்கு அனுப்ப வேண்டிய சவுகரியங்கள் செய்து கொடுப்பது மகாஜனங்களின் கடமையாகும். இதற்காக உடனே சத்தியாக்கிரகச் சாவடிகள் ஆங்காங்கு அமைக்கவேண்டும். போர் முனையில்வேண்டிய சகல சவுகரியங்களும் தயார் செய்து கொள்ளவேண்டும்.

சிறை செல்லும் தொண்டர்களின் குடும்பத்தைக் காப்பாற்றும் கடமையை நாம் எடுத்துக் கொள்ளாவிடினும், போரைச் சரியாய் நடத்தப் பணம் வேண்டும். பணம் திரட்டுவதற்காக இப்போது சுற்றித் திரியமுடியாது. ஆகையால் தேசபக்தர்கள் அனைவரும் தாங்களாகவே ஆங்காங்கு முயற்சியெடுத்து நண்பர்களைத் தூண்டி அடியிற் கண்ட விலாசத்திற்கு நன்கொடைகளை அனுப்பக் கோருகிறேன். தேசத்தில் நடைபெறும் போரில் நாம் வெற்றியடைந்தால் எக்கட்சியினருக்கும் நன்மையே. நஷ்டம் இல்லையென்பது உறுதி. எக்காரணத்தினாலாவது தோல்வி யடைந்தால் அனைவருக்கும் தீங்கேயாகும். மனதில் உறுதியும் செயலில் ஆண்மையும் கொண்டு போரில் இறங்கும் தியாகிகளுக்கு இச்சமயம் உதவிபுரிவது அனைவருடைய கடமையாகும். தமிழரின் நல்ல புகழைக் காப்பாற்ற அனைவரும் உடனே முன் வரவேண்டும்.

உப்புச் சட்டத்தை மீறி ஒரு பெரிய அநியாயத்தை ஒழிப்பதற்காகவும், ஆங்கிலஆட்சியின் சக்தியைஎதிர்த்து அடிமை மாயத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகவும் இந்தச் சட்ட மறுப்பு இயக்கத்தை மகாத்மா ஆரம்பித்திருக்கிறார். உப்புச் சட்டத்தை எதிர்க்க, தென்னாட்டில் எவ்விடத்தில் போர் தொடங்கலாம் என்பதை நிச்சயித்திருக்கிறோம். போர் தொடங்கிய பின் காரியங்கள்எவ்விதம்நடைபெறுகின்றனஎன்பதைப் பார்த்துப்பின்னால் இடம், முறை, முதலியவைகளை அவ்வப் போது மாற்றி நடத்தலாம். ஒற்றுமை, கட்டுப்பாடு, தைரியம், ஊக்கம், முயற்சி, வீரம் இவைகள் இருக்கும் வரை வெற்றியைப் பற்றி ஐயமில்லை.

ஏப்ரல் மாதம் தேசிய வாரத்தில் போருக்கு வேண்டிய திரவியமும் ஆளும் சேர்க்கத் தீவிர முயற்சி எடுக்க வேண்டும். எல்லா ஊர்களிலும் தலைவர்கள் இந்த வேலையைக் கவனிக்குமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். தொகைகளை அடியில் கண்ட விலாசங்களில் எதற்காவது அனுப்பலாம். ஏப்ரல்மீ 13உக்குள் எவ்வளவு சேர்க்க முடியுமோ அவ்வளவு சேர்த்து அனுப்புமாறு வேண்டிக்கொள்ளுகிறேன்.

டாக்டர் ராஜன், திரிசிராப்பள்ளி.

ஏ. வைத்தியநாதய்யர், சந்தைப்பேட்டை, மதுரை.

கே. பாஷ்யம், மயிலாப்பூர், சென்னை.

தமிழ் நாட்டின் சரித்திரத்தில் இது ஒரு மகத்தான சோதனைக் காலமாகும். கடவுள் துணை செய்க.

## III

## காங்கிரஸில் சேருங்கள்

சகோதர சகோதரிகளே!

பெரிய போர் தொடங்கப்பட் டிருக்கிறது. எல்லா மாகாணங்களும் தீவிரமாகப் போரில் சேர ஆயத்தம் செய்து வருகின்றன. உறங்கியது போதும். விழித்தெழுங்கள்.

தேச விடுதலைப் போருக்கு நீங்கள் செய்யக்கூடிய குறைந்த உதவியாவது என்ன? உங்கள் ஊரிலும் தாலூகாவிலு முள்ளவர்களைக் காங்கிரஸ் மகா சபையில் அங்கத்தினராகச் சேர்த்துத் தருவதே யாகும். பூரண சுயராஜ்ய இலட்சியத்தில் கையொப்பமிட்டு வருஷ சந்தா நாலணா கொடுத்தால் காங்கிரஸில் அங்கத்தினராகலாம். மகா சபை நடத்தும் போராட்டத்தில் ஜனங்களுக்கு அநுதாபம் உண்டு என்பதை நிரூபிக்க இது வழியாகும்.

தேசமெங்கும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் மகா சபையின் பூரண சுயராஜ்ய இலட்சியத்தை அங்கீகரித்துக் கையொப்பமிட்டிருக்கிறார்கள். உங்கள் தாலூகாவையும் எழுப்புங்கள். கால தாமதம் செய்ய வேண்டாம். அந்தந்தப் பிரதேசத்தில் ஊக்கமாக உழைக்கக்கூடிய ஒருதொண்டரை நிச்சயித்து அவரிடம் இவ் வேலையை ஒப்படையுங்கள். அவருக்கு எல்லா வகையிலும் உதவி செய்து காங்கிரஸ் ஸ்தாபனம் தேசமெங்கும் மறுபடியும் புத்துயிர் பெற்று ஓங்கச் செய்யுங்கள். காங்கிரஸானது மகா ஜனங்களின் சபை. உங்கள் ஒவ்வொருவருக்கும் அதில் உரிமை உண்டு. ஆகையால் மற்றவர்களை எதிர் பாராமல், நீங்களே முன் சென்று வேலையைத் தொடங்குங்கள். காங்கிரஸ் அங்கத்தினர் எவ்வளவுக்கு அதிகமாகின்றார்களோ அவ்வளவுக்கு சத்தியாக்கிரஹப் போர் துணைப்பலம் பெறும்.

## IV

## சமயத்தில் உதவுங்கள்

சகோதரர்களே, தாய் நாட்டின் மானத்தைக் காக்கவேண்டு மென்னும் விருப்பமுள்ளவர்கள் எல்லோரையும், இந்தப் பெரிய இயக்கத்திற்குப் பொருள் உதவி செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். இந்தப் போரினால் தேச மக்கள் எவருக்கும் கஷ்டமுண்டாகாது. எல்லோருக்கும் லாபமே உண்டு. அரசியலில் நீங்கள் எந்த முறையைப் பின்பற்றிய போதிலும், இந்த தர்ம யுத்தத்தினால் உங்கள் வேலை எளிதாவதையும், புதிய பலம் உங்களுக்கு ஏற்படுவதையும் காண்பீர்கள்.

நாங்கள் எடுத்திருக்கும் முறையை நீங்கள் ஒப்புக் கொள்ளாவிட்டாலும், எங்களுக்கு உதவி செய்தால், உங்களுக்கு லாபம் உண்டு. தேசத்தின் பெயரால் பொதுஜனங்கள் செய்யும் தியாகம் வீண்போகாது. இப் போரில் தியாகிகள் காட்டும் தைரியத்தினால் பொதுவாக தேசமே புதிய பலம் பெறும். எல்லா இயக்கங்களும் முன்னேற்ற மடையும். நீங்கள் விரும்பும் லக்ஷியம் கிட்டநெருங்கும்.

ஆகையால் உடனே உதவி செய்யுங்கள். தமிழ் வருஷப் பிறப்பு தினமாகிய ஏப்ரல்மீ 13உ யன்று தமிழ் சத்தியாக் கிரஹிகளின் முதற்படை சட்ட மறுப்புச் செய்வதற்காகப் புறப்படும். போர்க்களத்தில் அவசியமான விடுதிகள் அமைப்பதற்கும் மற்றச் செலவுகளுக்கும் பணம் வேண்டும். இதற்கு நீங்கள் உதவும் பணம் தேசத்தின் புனருத்தாரணத்திற்கு உதவுவதாகும். இதை விடச் சிறந்த வழியில் உங்கள் பணத்தைச் செலவிட முடியாது.

இந்தப் போராட்டத்தினால் உலகமெங்கும் பாரதநாட்டிற்கு கௌரவம் ஏற்படப்போகிறது. இந்தக் கௌரவத்தில் நீங்களும் பங்கெடுத்துக் கொள்ளுங்கள்.

ஆங்காங்குள்ளசெல்வாக்குள்ள நண்பர்கள் இவ்வியக்கத்தில் அநுதாப முள்ளவர்களையெல்லாம் சென்று பார்த்துப் பொருளுதவி திரட்டுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

சென்னை ஹிந்து தேவஸ்தான பரிபாலன போர்டு தலைவரான திவான் பகதூர் சி. வி. ரெங்கா ரெட்டியார் 26-3-30 மாலை மரணமடைந்தார். இப்பதவிக்கு ஸ்ரீமான் சூரிய ராவ் தற்காலிகமாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

# சட்டமறுப்பு இயக்கம்

## பலவிடங்களில் முயற்சி

### பம்பாய்

பம்பாய் நகரத்தில் சாத்வீக சட்டமறுப்புக்காக விசேட ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. கடற்கரையில் ஜுஹூ [illegible] ஸ்நான கட்டத்தில் உப்பு செய்யத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. காந்தி அடிகளின் உத்தரவு பெற்ற உடன் அல்லது அவர் கைதியானவுடன், 11 கிராமக் காங்கிரஸ் கமிட்டிகளின் உதவியைக்கொண்டு உப்புசெய்ய முயற்சிக்கப்படும்.

### கான்பூர்

கான்பூரில் சட்டமறுப்புக்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. தினந்தோறும் தொண்டர்கள் சேர்க்கப்பட்டு வருகிறார்கள். இங்குள்ள ராஷ்டிரீய வித்தியா சாலையைச் சேர்ந்த ஆறு மாணவர்கள் [illegible]களின் சாத்வீக இயக்கத்தைக் கிராமங்களில் பிரசாரஞ்செய்யப் புறப்பட்டிருக்கிறார்கள். 26-3-30ல் வக்கீல்களின் கூட்டம் ஒன்று மகாத்மாவின் சட்டமறுப்பைக் குறித்து ஆலோசனை செய்ய ஸ்ரீ பாபுலெ பிரசாத் என்னும் வக்கீலின் தலைமையில் நடைபெற்றது: அதுபோது, இவ்வூரிலுள்ள எல்லா வக்கீல்களும், காந்தியடிகளின் சட்ட மறுப்பு இயக்கத்தை ஆதரிப்பதுடன், சுதேசித்துணிகளில் முக்கியமாகக் கதரையே உபயோகப் படுத்தவேண்டு மென்றும், அரசாங்கத்தாருக்கு இவ்வியக்கத்திற்கு விரோதமாக, நேரகவோ, மறை முகமாகவோ யாதொரு உதவியும் செய்யக் கூடாதென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### வங்காளம்

டாக்டர் பானர்ஜியும் அவருடைய கூட்டத்தாரும் 27-3-30 மாலை [illegible] விட்டுப் புறப்பட்டு [illegible]பூருக்குச் சென்றார்கள். அங்கு [illegible] தொண்டர்கள் சேர்க்கப் பட்டார்கள். இரண்டு யூனியன் போர்டு அங்கத்தினர் இராஜினாமா செய்துவிட்டனர். இந்தக் கூட்டத்தார் செல்லுமிடங்களி லெல்லாம் ஜனங்களிடையே மிகுந்த உற்சாகத்தை உண்டு பண்ணுகின்றனர். இவர்கள் தங்குமிடங்களில் இராட்டினக்காட்சி நடத்தப்படுகிறது. 6-4-30-லோ அல்லது அடிகள் குறிப்பிடும் தினத்திலோ வங்காளத்தில் சில இடங்களில் உப்பு உற்பத்தி செய்யப்படு மென்றும், மாடியா, பங்குரா, மிதுனபுரி இவ்விடங்களிலுள்ளவர்கள் கோண்டாயில் உப்பு எடுக்கச் செல்வார்க ளென்றும், ஹௌரா, ஹூக்ளி, பர்த்துவான், பீர்பூம், [illegible] இவ்விடங்களிலுள்ளவர்கள் கடற்கரையில் மற்றோர் இடத்தில் உப்புச் சட்டத்தை மீறுவார்களென்றும், ஏப்ரல் மாதத்திலுள்ள கடைசி மூன்று வாரத்தில் [illegible] செல்லத் துணிந்த 6000 சத்தியாக்கிரகிகளை அனுப்ப ஏற்பாடா யிருக்கிறதென்றும் கல்கத்தா சட்ட மறுப்புத் தலைவரான ஸ்ரீ சதீஷ்தாஸ் குப்தா தெரிவிக்கிறார்.

### கோமில்லா

27-3-30-ல் கோமில்லாவில் நடந்த ஜில்லா காங்கிரஸ் நிர்வாகக் கூட்டத்தில் சாத்வீக சட்டமறுப்புச் சேனையில் [illegible]யும் சேர்த்துக் கொண்டு போர் ஆரம்பிக்க வேண்டுமெனத் தீர்மானம் செய்யப்பட்டது. இதில் கலந்து கொள்ளும்படி சிட்டகாங் ஜில்லாவுக்கும் அழைக்கப் பட்டிருக்கிறது.

### காசி

27-3-30 மாலையில் நடைபெற்ற காசி நகர காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமொன்றில் காசியில் சாத்வீக சட்டமறுப்பு இயக்கத்தை நடத்த ஸ்ரீ சம்பூர்ணானந்தர் சர்வாதிகாரியாக நியமிக்கப்பட்டார். தொண்டர்கள் சேர்க்கப் பட்டு வருகிறார்கள்.

### கொழும்பு

25-3-30-ல் கொழும்பு நகர மண்டபத்தில் கொழும்பு இளைஞர்களின் கூட்டமொன்று மகாத்மா காந்தியின் இயக்க சம்பந்தமாகத் தங்கள் அநுதாபத்தைத் தெரிவிக்கக் கூடிற்று. அது போது, சாத்வீக சட்ட மறுப்பு இயக்கத்தை ஆதரிக்க வேண்டு மென்றும், 13-4-30-ல் சுயேச்சை நாள் கொண்டாட வேண்டுமென்றும் தீர்மானஞ் செய்யப்பட்டது.

### மேற்கு கோதாவரி

சத்தியாக்கிரகிகளின்முதற்படை [illegible]விருந்து 31-3-30 மாலை புறப்பட்டு விட்டது. அப்படை பீமாபுரத்திற்குச் சென்று அங்கு நடைபெறப் போகும் 'மேற்கு கோதாவரி' ஜில்லா அரசியல் மகாநாட்டில் கலந்துகொள்ளும். அதற்குப் பிறகே உப்புச் சத்தியாக்கிரகம் செய்யும் இடம் நிர்ணயிக்கப்படும்.

## பண்டித மாளவியாவுக்கு ஒரு பகிரங்கக் கடிதம்

### காந்தியடிகளைச் சேர வேண்டுகோள்

இந்தியா சட்டசபை அங்கத்தினரான ஸ்ரீமான்கள் சத்தியேந்திர சந்திர மித்திரா, பி. தாஸ், தாகூர்தாஸ் பார்க்கவா, நீலகண்டதாஸ், முக்தார் சிங், அமரநாததத்தர், ரங்க விஹாரிலால், ஆகியோர் சேர்ந்து பண்டித மதன்மோகன மாளவியாவுக்கு ஒரு பகிரங்கக் கடிதம் அனுப்பியிருக்கின்றனர். அதன் சாரம் வருமாறு:—

தேசியப் போராட்டத்தின் நெருக்கடியான தற்போதைய நிலையில் [illegible]

## மகாத்மா காந்தி படம்

### தடுக்கப்பட்டதைப்பற்றி அங்கத்தினர் கண்டனம்

மகாத்மா காந்தி தமது சத்தியாக்கிரஹப் படையுடன் 12-3-30-ல் ஆசிரமத்திலிருந்து புறப்பட்டபோது பல சினிமாக் கம்பெனிகள் கூட இருந்து பல படங்களை எடுத்தன. [illegible]

ஸ்ரீமான் ஹரிச்சந்திரம்:— [illegible]

ஸ்ரீமான் ஆர். சிவராசன்:— [illegible]

ஜனாப் ஹமீத் கான்:— [illegible]

ஸ்ரீமான் ஹரிசர்வோத்தம ராவ்:— [illegible]

ஸ்ரீமான் எல். கே. அனிராம்:— [illegible]

ஸ்ரீமான் பி. முனிசாமி நாயுடு:— [illegible]

ஸ்ரீமான் ஏ. அரங்கநாத முதலியார்:— [illegible]

ஹோம் அங்கத்தினர்:—இப்பொழுது [illegible]

### தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் [illegible]

## அகில இந்திய காங்கிரஸ் கூட்டம்

### காந்தியடிகளின் யோசனைகள்

சென்ற வாரத்து "யங் இந்தியா" பத்திரிகையில் மகாத்மா காந்தி எழுதியுள்ள ஒரு கட்டுரையின் சாரம் வருமாறு:—

ஆமதாபாத்தில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம், [illegible]

### வேறு சட்டங்களை மீறி நடத்தல்

வேறு சில சட்டங்களையும் மீறி நடக்க வேண்டுமென்ற பேச்சு [illegible]



## சட்டமறுப்புத் தொண்டர்களுக்கு

ஸ்ரீமான் சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் பின்வருமாறு எழுதுகிறார்:—

I

தமிழ் நாட்டில் சத்தியாக்கிரஹப் படைக்குத் தொண்டர்கள் விரைவாகச் சேர்ந்துவருகிறார்கள். கூடிய விரைவில் போர் துவங்கிவிட வேண்டுமென்று காந்தியடிகள் கடைசியாகத் தெரிவித்திருக்கிற படியால், பல ஜில்லாக்களின் வழியாகத் தொண்டர் படையைக் கால் நடையாக அழைத்துச் செல்லும் யோசனை கைவிடப்பட்டது. உப்பு வரிப் போர் தஞ்சாவூர் ஜில்லாவில் நடைபெறப் போவதை முன்னிட்டு அந்த ஜில்லாவில் மட்டும் தொண்டர் படை கால் நடையாகப் பிரயாணம் செய்வதென்று தீர்மானித்திருக்கிறோம்.

ஐம்பது தொண்டர்கள் அடங்கிய சத்தியாக்கிரஹ முதல் படை தமிழ் வருஷப் பிறப்பு தினமாகிய ஏப்ரல்மீ 13உ [ஜாலியன் வாலாபாக் நாளன்று] திரிசிராப்பள்ளியிலிருந்து வேதாரண்யத்துக்குப் புறப்படும். தொண்டர்கள் காலையில் ஐந்து மைலும், மாலையில் ஐந்து மைலும் நடந்து சராசரி தினம் பத்து மைல் பிரயாணம் செய்வார்கள். வழியில் தஞ்சாவூர், கும்பகோணம், மன்னார்குடி, திருத்தருப் பூண்டி முதலிய பட்டணங்களிலும் மற்றும் பல கிராமங்களிலும் தங்கிச் செல்வார்கள்.

முதற்படைக்கு எடுக்கப்பட்ட தொண்டர்களுக்கு, நேரகவோ, உள்ளூர்த்தலைவர்கள் மூலமோ தெரிவிக்கப்படும். அவர்கள் 12உ சாயங்காலமே திருச்சிக்கு வந்து சேரவேண்டும். 13உ அதிகாலையில் பிரயாணம் ஆரம்பமாகிவிடும்.

தொண்டர்கள் பிரயாணத்தின் போது கிராம சுகாதாரத்துக்குரிய வேலை செய்து கொண்டு போவார்கள். வழியிலுள்ள கிராமங்களைப் பெருக்கிச் சுத்தம் செய்ய உத்தேசித்திருக்கிறோம். கிராம வாசிகள் தொண்டர்களுக்கு உணவு முதலிய வசதிகள் அளிப்பதற்குப் பதிலாக இந்தத் தொண்டு நாம் செய்ய வேண்டும்.

தொண்டர் ஒவ்வொருவரும் தத்தம் உபயோகத்திற்கு வேண்டிய சாமான்கள் கொண்டு வரவேண்டும். ஆனால் அவரவர்கள் சுலபமாய்த் தூக்கிச் செல்லக் கூடிய மூட்டையாயிருக்க வேண்டும். படுப்பதற்கும், மாற்றி உடுத்திக் கொள்வதற்கும் சில வேஷ்டிகள், தண்ணீருக்குச் சிறு செம்பு ஒன்று இவையே போதும். அவரவர் சாதாரணமாய் அணிந்து கொள்ளும் உடையே இப்பிரயாணத்திலும் அணிந்து கொள்ளலாம். தனி உடை வேண்டியதில்லை.

உறுதி மொழியில் கையெழுத்திட்டிருக்கும் மற்றத் தொண்டர்கள் எல்லாரும் எந்த நிமிஷமும் கிளம்புவதற்குச் சித்தமாயிருக்க வேண்டும். ஆனால் தகவல் கிடைக்கும்வரை அவர்கள் புறப்படக்கூடாது.

போரில் சேரவிரும்பும் மற்றையோர் உடனே தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ள வேண்டும். அஹிம்சா தர்மத்தில் நம்பிக்கையுடன், எவ்வளவு துன்பங்கள் நேர்ந்தாலும் சகித்துக்கொண்டு கடைசிவரை தைரியமாய் நிற்க உறுதி கொண்டவர்களே போரில் சேரவேண்டும்.

உறுதி மொழிப்பத்திரமும், மற்றத் தகவல்களும் எல்லா ஊர்களிலுமுள்ள காங்கிரஸ் கமிட்டிகளிலும், பின் [illegible] பெற்றுக் கொள்ளலாம்:—

(1) மாகாண காங்கிரஸ் கமிட்டி ஆபீஸ், மகாஜன சபை, சென்னை.

(2) யுவர் சங்கம் அரசியல் பிரிவு, இந்திய ஊழியர் சங்கக் கட்டடம், இராயப்பேட்டை, சென்னை.

ஸ்ரீமான்கள்

(3) டாக்டர் பி. சீனிவாசன், காஞ்சிபுரம்.

(4) என். அண்ணாமலைப் பிள்ளை, திருவண்ணாமலை.

(5) வி. வி. இராஜகோபாலாச்சாரியார், வேலூர்.

6. எஸ். இளையாழ்வார், கள்ளக்குறிச்சி.

7. சி.எஸ். சுவாமிநாதசெட்டியார், சீகாழி.

8. பந்துலு ஐயர், கும்பகோணம்.

9. டாக்டர் முத்துகிருஷ்ண ஐயர், மன்னார்குடி.

10. டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், திருச்சி.

11. ஏ. வேதரத்தினம் பிள்ளை, வேதாரணியம்.

12. என். ஹாலாஸ்யம், புத்தூர், திருச்சி.

13. ஏ. வைத்திநாதய்யர், மதுரை.

14. தி. ரா. மகாதேவய்யர், திண்டுக்கல்.

15. பொ. திரிகூடசுந்தரம் பிள்ளை, அமராவதி புதூர், காரைக்குடி.

16. கே. சுப்பிரமண்யம், கோயமுத்தூர்.

17. பி. எஸ். குமாரசாமி ராஜா, இராஜபாளையம்.

18. கந்தசாமிப் பிள்ளை, காங்கிரஸ்கமிட்டி, தூத்துக்குடி.

19. வி. எஸ். சம்பத்துசெட்டியார், கடைத்தெரு, சேலம்.

II

### தமிழ் நாட்டாருக்கு

மகாத்மாஜியை சிறைப்படுத்தலாமாவேண்டாமா என்று அரசாங்கத்தார் இன்னும் யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த அவகாசத்தை நாம் செவ்வனே பயன்படுத்திக் கொள்வது கடமையாகும். சீக்கிரத்தில் அதாவது ஏப்ரல்மீ 5உ தலைவர் கடற்கரை சேர்வார். மறுநாள் உப்புச்சட்டத்தை மீறுவார். தேசத்தில் அனைவரும் சாத்வீகப்போரில் சேருமாறு கட்டளையிடுவார்.

தமிழ் நாட்டிலும் ஏராளமான வீரர்கள் போரில் சேர ஆயத்தமாயிருக்கிறார்கள். அவர்களைத் திரட்டிப் போருக்கு அனுப்ப வேண்டிய சவுகரியங்கள் செய்து கொடுப்பது மகாஜனங்களின் கடமையாகும். இதற்காக உடனே சத்தியாக்கிரகச் சர்வடிகள் ஆங்காங்கு அமைக்கவேண்டும். போர் முனையில்வேண்டிய சகல சவுகரியங்களும் தயார் செய்து கொள்ளவேண்டும்.

சிறை செல்லும் தொண்டர்களின் குடும்பத்தைக் காப்பாற்றும் கடமையை நாம் எடுத்துக் கொள்ளாவிடினும், போரைச் சரியாய் நடத்தப் பணம் வேண்டும். பணம் திரட்டுவதற்காக இப்போது சுற்றித் திரியமுடியாது. ஆகையால் தேசபக்தர்கள் அனைவரும் தாங்களாகவே ஆங்காங்கு முயற்சியெடுத்து நண்பர்களைத் தூண்டி அடியிற் கண்ட விலாசத்திற்கு நன்கொடைகளை அனுப்பக் கோருகிறேன். தேசத்தில் நடைபெறும் போரில் நாம் வெற்றியடைந்தால் எக்கட்சியினருக்கும் நன்மையே. நஷ்டம் இல்லையென்பது உறுதி. எக்காரணத்தினாலாவது தோல்வி யடைந்தால் அனைவருக்கும் தீங்கேயாகும். மனதில் உறுதியும் செயலில் ஆண்மையும் கொண்டு போரில் இறங்கும் தியாகிகளுக்கு இச்சமயம் உதவிபுரிவது அனைவருடைய கடமையாகும். தமிழரின் நல்ல புகழைக் காப்பாற்ற அனைவரும் உடனே முன் வரவேண்டும்.

உப்புச் சட்டத்தை மீறி ஒரு பெரிய அநியாயத்தை ஒழிப்பதற்காகவும், ஆங்கிலஆட்சியின் சக்தியைஎதிர்த்து அடிமை மாயத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகவும் இந்தச் சட்டமறுப்பு இயக்கத்தை மகாத்மா ஆரம்பித்திருக்கிறார். உப்புச் சட்டத்தை எதிர்க்க, தென்னாட்டில் எவ்விடத்தில் போர் தொடங்கலாம் என்பதை நிச்சயித்திருக்கிறோம். போர் தொடங்கிய பின் காரியங்கள்எவ்விதம்நடைபெறுகின்றனஎன்பதைப் பார்த்தபின்னால் இடம், முறை, முதலியவைகளை அவ்வப்போது மாற்றி நடத்தலாம். ஒற்றுமை, கட்டுப்பாடு, தைரியம், ஊக்கம், முயற்சி, வீரம் இவைகள் இருக்கும் வரை வெற்றியைப் பற்றி ஐயமில்லை.

ஏப்ரல் மாதம் தேசிய வாரத்தில் போருக்கு வேண்டிய திரவியமும் ஆளும் சேர்க்கத் தீவிர முயற்சி எடுக்க வேண்டும். எல்லா ஊர்களிலும் தலைவர்கள் இந்த வேலையைக் கவனிக்குமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். தொகைகளை அடியில் கண்ட விலாசங்களில் எதற்காவது அனுப்பலாம். ஏப்ரல்மீ 13உக்குள் எவ்வளவு சேர்க்க முடியுமோ அவ்வளவு சேர்த்து அனுப்புமாறு வேண்டிக்கொள்ளுகிறேன்.

டாக்டர் ராஜன், திரிசிராப்பள்ளி.

ஏ. வைத்தியநாதய்யர், சக்தைப்பேட்டை, மதுரை.

கே. பாஷ்யம், மயிலாப்பூர், சென்னை.

தமிழ் நாட்டின் சரித்திரத்தில் இது ஒரு மகத்தான சோதனைக் காலமாகும். கடவுள் துணை செய்க.

III

### காங்கிரஸில் சேருங்கள்

சகோதர சகோதரிகளே!

பெரிய போர் தொடங்கப்பட்டிருக்கிறது. எல்லா மாகாணங்களும் தீவிரமாகப் போரில் சேர ஆயத்தம் செய்து வருகின்றன. உறங்கியது போதும். விழித்தெழுங்கள்.

தேச விடுதலைப் போருக்கு நீங்கள் செய்யக்கூடிய குறைந்த உதவியாவது என்ன? உங்கள் ஊரிலும் தாலூகாவிலு முள்ளவர்களைக் காங்கிரஸ் மகா சபையில் அங்கத்தினராகச் சேர்த்துத் தருவதே யாகும். பூரண சுயராஜ்ய இலட்சியத்தில் கையொப்பமிட்டு வருஷ சந்தா நாலணா கொடுத்தால் காங்கிரஸில் அங்கத்தினராகலாம். மகா சபை நடத்தும் போராட்டத்தில் ஜனங்களுக்கு அநுதாபம் உண்டு என்பதை நிரூபிக்க இது வழியாகும்.

தேசமெங்கும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் மகா சபையின் பூரண சுயராஜ்ய இலட்சியத்தை அங்கீகரித்துக் கையொப்பமிட்டிருக்கிறார்கள். உங்கள் தாலூகாவையும் எழுப்புங்கள். கால தாமதம் செய்ய வேண்டாம். அந்தந்தப் பிரதேசத்தில் ஊக்கமாக உழைக்கக்கூடிய ஒருதொண்டரை நிச்சயித்து அவரிடம் இவ் வேலையை ஒப்படையுங்கள். அவருக்கு எல்லா வகையிலும் உதவி செய்து காங்கிரஸ் ஸ்தாபனம் தேசமெங்கும் மறுபடியும் புத்துயிர் பெற்று ஓங்கச் செய்யுங்கள். காங்கிரஸானது மகா ஜனங்களின் சபை. உங்கள் ஒவ்வொருவருக்கும் அதில் உரிமை உண்டு. ஆகையால் மற்றவர்களை எதிர் பாராமல், நீங்களே முன் சென்று வேலையைத் தொடங்குங்கள். காங்கிரஸ் அங்கத்தினர் எவ்வளவுக்கு அதிகமாகின்றார்களோ அவ்வளவுக்கு சத்தியாக்கிரஹப் போர் துணைப்பலம் பெறும்.

IV

### சமயத்தில் உதவுங்கள்

சகோதரர்களே, தாய் நாட்டின் மானத்தைக் காக்கவேண்டு மென்னும் விருப்பமுள்ளவர்கள் எல்லோரையும், இந்தப் பெரிய இயக்கத்திற்குப் பொருள் உதவி செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். இந்தப் போரினால் தேச மக்கள் எவருக்கும் நஷ்டமுண்டாகாது. எல்லோருக்கும் லாபமே உண்டு. அரசியலில் நீங்கள் எந்த முறையைப் பின்பற்றிய போதிலும், இந்த தர்ம யுத்தத்தினால் உங்கள் வேலை எளிதாவதையும், புதிய பலம் உங்களுக்கு ஏற்படுவதையும் காண்பீர்கள்.

நாங்கள் எடுத்திருக்கும் முறையை நீங்கள் ஒப்புக் கொள்ளாவிட்டாலும், எங்களுக்கு உதவி செய்தால், உங்களுக்கு லாபம் உண்டு. தேசத்தின் பெயரால் பொதுஜனங்கள் செய்யும் தியாகம் வீண்போகாது. இப்போரில் தியாகிகள் காட்டும் தைரியத்தினால் பொதுவாக தேசமே புதிய பலம் பெறும். எல்லா இயக்கங்களும் முன்னேற்ற மடையும். நீங்கள் விரும்பும் லக்ஷியம் கிட்ட நெருங்கும்.

ஆகையால் உடனே உதவி செய்யுங்கள். தமிழ் வருஷப் பிறப்பு தினமாகிய ஏப்ரல்மீ 13உ யன்று தமிழ் சத்தியாக் கிரஹிகளின் முதற்படை சட்ட மறுப்புச் செய்வதற்காகப் புறப்படும். போர்க்களத்தில் அவசியமான விடுதிகள் அமைப்பதற்கும் மற்றச் செலவுகளுக்கும் பணம் வேண்டும். இதற்கு நீங்கள் உதவும் பணம் தேசத்தின் புனருத்தாரணத்திற்கு உதவுவதாகும். இதை விடச் சிறந்த வழியில் உங்கள் பணத்தைச் செலவிட முடியாது.

இந்தப் போராட்டத்தினால் உலகமெங்கும் பாரதநாட்டிற்கு கௌரவம் ஏற்படப்போகிறது. இந்தக் கௌரவத்தில் நீங்களும் பங்கெடுத்துக் கொள்ளுங்கள்.

ஆங்காங்குள்ளசெல்வாக்குள்ள நண்பர்கள் இவ்வியக்கத்தில் அனுதாப முள்ளவர்களையெல்லாம் சென்று பார்த்துப் பொருளுதவி திரட்டுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

சென்னை ஹிந்து தேவஸ்தான பரிபாலன போர்டு தலைவரான திவான் பகதூர் சி. வி. ரெங்கா ரெட்டியார் 26-3-30 மாலை மரணமடைந்தார். இப்பதவிக்கு ஸ்ரீமான் சூரிய ராவ் தற்காலிகமாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

## சட்டமறுப்பு இயக்கம்

### பலவிடங்களில் முயற்சி

#### பம்பாய்

பம்பாய் நகரத்தில் சாத்வீக சட்டமறுப்புக்காக விசேஷ ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. கடற்கரையில் ஜுஹு என்னும் ஸ்நான கட்டத்தில் உப்பு செய்யத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. காந்தி அடிகளின் உத்தரவு பெற்ற உடன் அல்லது அவர்கைதியானவுடன், 11 கிராமக் காங்கிரஸ் கமிட்டிகளின் உதவியைக்கொண்டு உப்புசெய்ய முயற்சிக்கப்படும்.

#### கான்பூர்

கான்பூரில் சட்டமறுப்புக்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. தினந்தோறும் தொண்டர்கள் சேர்க்கப்பட்டு வருகிறார்கள். இங்குள்ள ராஷ்டிரீய வித்தியாசாலையைச் சேர்ந்த ஆறு மாணவர்கள் அடிகளின் சாத்வீக இயக்கத்தைக் கிராமங்களில் பிரசாரஞ்செய்யப் புறப்பட்டிருக்கிறார்கள். 26-3-30ல் வக்கீல்களின் கூட்டம் ஒன்று மகாத்மாவின் சட்டமறுப்பைக் குறித்து ஆலோசனை செய்ய ஸ்ரீ பாபுசிவ பிரசாத் என்னும் வக்கீலின் தலைமையில் நடைபெற்றது. அதுபோது, இவ்வூரிலுள்ள எல்லா வக்கீல்களும், காந்தியடிகளின் சட்டமறுப்பு இயக்கத்தை ஆதரிப்பதுடன், சுதேசித்துணிகளில் முக்கியமாகக் கதரையே உபயோகப் படுத்தவேண்டு மென்றும், அரசாங்கத்தாருக்கு இவ்வியக்கத்திற்கு விரோதமாக, நேரகவோ, மறை முகமாகவோ யாதொரு உதவியும் செய்யக் கூடாதென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

#### வங்காளம்

டாக்டர் பானர்ஜியும் அவருடைய கூட்டத்தாரும் 27-3-30 மாலை பெரியாட்டரை விட்டுப் புறப்பட்டு பிருந்தாவனப் பூருக்குச் சென்றார்கள். அங்கு 80 தொண்டர்கள் சேர்க்கப் பட்டார்கள். இரண்டு யூனியன் போர்டு அங்கத்தினர் இராஜினாமா செய்து விட்டனர். இந்தக் கூட்டத்தார் செல்லுமிடங்களி லெல்லாம் ஜனங்களிடையே மிகுந்த உற்சாகத்தை உண்டு பண்ணுகின்றனர். இவர்கள் தங்குமிடங்களில் இராட்டினக்காட்சி நடத்தப்படுகிறது. 6-4-30-லோ அல்லது அடிகள் குறிப்பிடும் தினத்திலோ வங்காளத்தில் சில விடங்களில் உப்பு உற்பத்தி செய்யப்படு மென்றும், மாடியா, பங்கூரா, மிதுனபுரி இவ்விடங்களிலுள்ளவர்கள் கோண்டாயில் உப்பு எடுக்கச் செல்வார்க ளென்றும், ஹௌரா, ஹுக்ளி, பர்த்துவான், பிர்பூம், மூர்ஷிதாபாத் இவ்விடங்களி லுள்ளவர்கள் கடற்கரையில் மற்றோர் இடத்தில் உப்புச் சட்டத்தை மீறுவார்களென்றும், ஏப்ரல் மாதத்திலுள்ள கடைசி மூன்று வாரத்தில் சிறை செல்லத் துணிந்த 6000 சத்தியாக்கிரகிகளை அனுப்ப ஏற்பாடா யிருக்கிறதென்றும் கல்கத்தா சட்ட மறுப்புத் தலைவரான ஸ்ரீ சதீஷ்தாஸ் குப்தா தெரிவிக்கிறார்.

#### கோமில்லா

27-3-30-ல் கோமில்லாவில் நடந்த ஜில்லா காங்கிரஸ் நிர்வாகக் கூட்டத்தில் சாத்வீக சட்டமறுப்புச் சேனையில் நோவாக் காலியையும் சேர்த்துக் கொண்டு போர் ஆரம்பிக்க வேண்டுமெனத் தீர்மானம் செய்யப்பட்டது. இதில் கலந்து கொள்ளும்படி சிட்டகாங்கு ஜில்லாவுக்கும் அழைக்கப் பட்டிருக்கிறது.

#### காசி

27-3-30 மாலையில் நடைபெற்ற காசி நகர காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமொன்றில் காசியில் சாத்வீக சட்டமறுப்பு இயக்கத்தை நடத்த ஸ்ரீ சம்பூரணனந்தர் சர்வாதிகாரியாக நியமிக்கப்பட்டார். தொண்டர்கள் சேர்க்கப்பட்டு வருகிறார்கள்.

#### கொழும்பு

25-3-30-ல் கொழும்பு நகர மண்டபத்தில் கொழும்பு இளைஞர்களின் கூட்டமொன்று மகாத்மா காந்தியின் இயக்க சம்பந்தமாகத் தங்கள் அநுதாபத்தைத் தெரிவிக்கக் கூடிற்று. அது போது, சாத்வீக சட்ட மறுப்பு இயக்கத்தை ஆதரிக்க வேண்டுமென்றும், 13-4-30-ல் சுயேச்சை நாள் கொண்டாட வேண்டுமென்றும் தீர்மானஞ் செய்யப்பட்டது.

#### மேற்கு கோதாவரி

சத்தியாக்கிரகிகளின்முதற்படை எல்லூரிலிருந்து 31-3-30மாலை புறப்பட்டு விட்டது. அப்படை பீமாபுரத்திற்குச் சென்று அங்கு நடைபெறப் போகும் 'மேற்கு கோதாவரி ஜில்லா அரசியல் மகாநாட்டில் கலந்து கொள்ளும். அதற்குப் பிறகே உப்புச் சத்தியாக்கிரகம் செய்யும் இடம் நிர்ணயிக்கப்படும்.

(9-ம் பக்கத் தொடர்ச்சி).

வேர்பு, உபசரிப்பு முதலிய சௌகரியங்கள் செய்யக் கூடாதென்றும், அவ்வுத்தியோகஸ்தர்கள் கிராமவாசிகளின் நிலைமையைக் கவனிக்க வேண்டுமென்றும், இனிப் போலீஸ் படேல்கள் அவ்வுத்தியோகஸ்தர்களைப் பகிஷ்கரிக்க வேண்டியதே தம்முடைய யோசனையென்றும், அரசாங்க வேலையினின்று இராஜினாமா செய்பவர்களை ஊர்வலமாக அழைத்துச் செல்ல வேண்டுமென்றுங் கூறினார். எர்தானிலுள்ள படேல், கூட்டத்திற்கு வந்திருந்தார். மேற் கூறிய யோசனையில் அவருக்கு உறுதியிருக்கிறதா என்று அடிகள் வினவிய போது, அவர் உறுதி இருப்பதாகக் கூறினார். இன்னும் அவர் உப்புச் சட்ட மறுப்பு, கதர் தரித்தல் இவைகளின் அவசியத்தைப்பற்றியும் எடுத்துக் கூறினார். முடிவில் பல மாதர்களும், சிறுவர்களும் கதர் நூலுடன் நன்கொடைகளும் அடிகளிடம் தந்தார்கள். இதன்மூலம்கிடைத்த மொத்தத் தொகை சுமார் 350 ரூபாயாகும்.

### தீண்டாதாரின் உறுதிமொழி

எர்தானில் காந்தி அடிகள் தங்கியிருந்த போது, தீண்டாதா ரெனப்படுவோருள் 32 புருஷர்களும், 7 மாதர்களும் அவரிடம் போக்கு குடியை விட்டு விடுவதாக உறுதிமொழி கூறினார்கள். ஒருவர் ஊன் உண்ணுதலை விட்டுவிடுவதாக உறுதி கூறினார். 29-3-30 பிற்பகல் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் சேபான் கிராமத்தலைமை உத்தியோகஸ்தர் இராஜினாமா செய்து விட்டதாக அறிவிக்கப்பட்டது. 24 பேர் கதரை உடுத்துவதாகவும் 12 பேர் நூல் நூற்பதாகவும் சத்தியஞ் செய்தனர். பின்னர் அடிகள் எல்லோரையும் குடியை ஒழித்து விடும்படியும், கதர் அணியும்படியும், நூல் நூற்கும்படியும் இவைகளைச் செய்த பின்னர், சுயராஜ்யம் எப்போது கிடைக்குமென்று கம்மைக் கேட்கும்படியும் கூறினார். இவைகளைச் செய்யாமல், உப்புச்சட்டம் ஒழிந்தாலுங்கூட அவர்களுக்குச் சுயராஜ்யம் கிட்டப் போவதில்லை என்றும் சொன்னார்.

### பத்காம்

29-3-30 மாலை காந்தியடிகளும் அவருடைய திருக்கூட்டத்தினரும் பத்காம் நண்ணினார்கள். இரவில் இங்கு நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் அடிகள் எர்தானில் நூற்றது போலவே தக்ளி என்னும் கருவியில் நெடுநேரம் நூல்நூற்க ஆரம்பித்தார். இது சம்பந்தமாக விசாரணை செய்தபோது, சூரத் ஜில்லாவில் பற்பல கிராமங்களில் இராட்டினங்கள் வேலைசெய்யும் பொருட்டுக் கூர்ஜார வித்யா பீடத்திலிருந்து அனுப்பப்பட்ட இராட்டினங்களை அவர் மற்ற கிராமங்களுக்கு அனுப்பிவிட்டாரென்றும், சூரத் ஜில்லா கிராமங்களில் போதிய இராட்டினங்கள் இல்லையென்றும் தெரியவந்தது. எனவே, நூல் நூற்பவர்கள் பர்தோலி ஒர்க்ஷாப்பிலிருந்து இராட்டினங்களை வரவழைத்தார்கள். இதனால் அடிகளுக்கு மனவருத்தம் உண்டாயிற்று. நூல் நூற்பவர்கள் இராட்டினங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கக் கூடாதென்னும் படிப்பினையை அறிவுறுத்தும் பொருட்டே அவர் தக்ளியில் நூற்கலாரம்பித்தார். தொண்டர்களும், சூரத் ஜில்லாவிலுள்ள ஊழியர்களும் தேவைக்கு அதிகமாகச் செலவு செய்ததை உணர்ந்த அடிகள், அவர்களுக்கு அறிவுச் சுடர்கொளுத்த வேண்டிச் செய்த விரிவுரை வருமாறு :—போர்ப் பிரயாணத்தைச் சுருங்கிய செலவில் நடத்தவேண்டியது அத்தியாவசியம். நாம் கோடிக்கணக்கான ஏழை மக்களுக்குப் பிரதிநிதிகளென்று கூறிக் கொள்வதால், நம்முடைய தேவைக் கதிகமாகச் செலவுசெய்யக் கூடாது. நம் பிரயாணத்தின் முடிவில் கணக்கை நோக்கும்போது, ஒவ்வொரு தொண்டரும், ஓர் இந்தியரின் சராசரி வருமானத்துக்கு ஐம்பது பங்கு அதிகமாகச் செலவு செய்திருப்பதாக வெளிப்படின், இராஜப்பிரதிநிதி ஓர் இந்தியரின் சராசரி வருமானத்தை விட ஐயாயிரம் பங்கு அதிகமான சம்பளம் பெறுவதை நாம் குறை கூறுவது நியாயமாகாது. சூரத்திலிருந்து சாய்கறிகள், பழங்கள், பால் இவைகள் கொண்டு வருவதாலும் பர்தோலியிலிருந்து இராட்டினங்களை வண்டிகளில் கொண்டு வருவதாலும், பெரிய விளக்குகளை உபயோகப்படுத்துவதாலும் ஒரு தொண்டரின் தினசரி செலவு ஓர் இந்தியரின் சராசரி வருமானத்தை விட ஐம்பது மடங்கு அதிகமாகிவிடும். ஓர் இந்தியருக்குத் தினசரி வருமானம் சராசரியில் பார்க்கும்போது 1¾ அணா எனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இராக்காலங்களில்பிரயாணஞ்செய்யும்போது ஒரு தொழிலாளர் தலையில் பாரமான ஒரு பெரிய விளக்கைத் தூக்கிக் கொண்டு வருவதைப் பார்த்தேன். ஒரு சிறு விளக்கை உபயோகப்படுத்த வேண்டியது அவசியந்தான். அதைக்கூட தொண்டர்கள் தூக்கிச் செல்ல வேண்டுமே யொழிய, கூலியாட்களை நியமித்தலாகாது. எல்லோரும் என்னைக் கைவிட்டபோதிலும், நான் ஆசிரமம் திரும்பப் போவதில்லை. நான் தனிமையாக நின்று போராடுவேன். பின்பு அடிகள் பெண்பாலார் கூட்டத்தைநோக்கி, "நீங்கள் முழு நம்பிக்கையுடன் அளித்த பணத்தைப் பெற நான் தகுதியற்றவன்" என்று கூறினார்.

### சாந்தியார்

30-3-30 காலை காந்தியடிகள் திருக்கூட்டத்தார் சாந்தியார் என்னும் கிராமத்திற்கு வந்து சேர்ந்தனர். கிராமஜனங்கள் அடிகளையும், அவருடைய திருக்கூட்டத்தாரையும் உற்சாகத்துடன் நன்குவரவேற்றார்கள். அன்று பிற்பகல் நடந்த ஒரு பொதுக் கூட்டத்திற்குச் சுமார் இரண்டாயிரம் பேர் வந்திருந்தனர். பம்பாயிலிருந்து பிரபல துணி வியாபாரிகளும் ஈண்டுக் கூட்டத்தில் பிரசன்னமாயிருந்தார்கள். அதுபோது அடிகள் பேசியது வருமாறு :—என்னைக் காணப் பம்பாயிலிருந்து சில அயல்நாட்டுத் துணி வியாபாரிகள் இங்கு வந்திருக்கிறார்கள். 1920-ம் ஆண்டைவிட இப்பொழுது இவ்வியாபாரிகள் அந்நியநாட்டுத் துணியைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்று உணர்ந்திருப்பதை நான் காண்கிறேன். ஆனால் சிலர் ஜப்பான் துணிகளைத் தவிர்த்து மற்ற அந்நியநாட்டுத் துணிகளைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்கிறார்கள். ஆனால் இங்கிலீஷ் வியாபாரிகள் தங்களுடைய துணிகளின்மீது "ஜப்பானில் செய்யப் பட்டது" என்று பொறித்து, ஜப்பான் மூலமாகவே எல்லாத் துணிகளையும் இந்தியாவுக்கு அனுப்பக் கூடிய சாமர்த்தியம் வாய்த்தவர்கள். எனவே, எல்லா அந்நிய நாட்டுத் துணிகளையும் பகிஷ்கரித்து விடுவதே நல்லது. இப்பொழுது துணி வியாபாரிகள் அந்நியநாட்டுத் துணிகளை விற்பனை செய்வதால், சாத்தான் வேலை செய்கிறவர்களாகிறார்கள். வரப்போகும் காலத்தில் அவர்கள் சுதேசித் துணிகளை விற்கப் போவதினால் அவர்கள் தெய்வீக வேலை செய்கிறவர்களாக மாறி விடுவார்கள். ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் பௌத்திரியார் பெண்கள் இப்போரில் கலந்து கொள்வதற்காக அநுமதி பெற இன்று காலை வந்திருந்தார். சபர்மதி ஆசிரமத்திலிருந்து புறப்பட்ட அவரும் அவருடைய ஸ்திரீ நண்பர்களும் சயான் ஸ்டேஷனில் இறங்கி அந்தக் கிராமத்தைச் சுத்தஞ் செய்தார்கள். இந்த உதாரணத்தை ஆண் தொண்டர்களாகிய நீங்கள் பின்பற்றுதல் வேண்டும். பெண்பாலார் இந்தப் போராட்டத்தில் சேரத் தயாராக விரும்பின், அவர்களைச் சேர்த்துக் கொள்வதற்கு அநுமதிதர ஒரு க்ஷணமும் தயங்கமாட்டேன்."

### டிலாட்

30-3-30 மாலை காந்தியடிகள் திருக்கூட்டத்தார் சாந்தியாரை விட்டு நான்கு மைல் தூரத்திலுள்ள டிலாட்டுக்குப் புறப்பட்டனர். வழி நெடுக பாதையின் இருமருங்கிலும், ஆண், பெண், குழந்தைகளனைவரும் மகாத்மாவைத் தரிசிக்க உற்சாகத்துடன் நின்று கொண்டிருந்தார்கள். டிலாட் கிராமம் எல்லாம் தோரணங்களாலும், வளைவுகளாலும் அலங்கரிக்கப் பட்டிருந்தன. பல வர்ணமுள்ள சேலைகளை அணிந்து கொண்டிருந்த மாதர்கள் கல்வாரைக்குறித்த பாட்டுக்களைப் பாடிக்கொண்டிருந்த காட்சி மிகவும் அழகாயிருந்தது. ஒவ்வொரு நிமிஷமும் "வந்தேமாதரம்" "மகாத்மா காந்திக்கு ஜே" என்னும் ஒலிகள் எழுந்து கொண்டேயிருந்தன. ஒரு மைல் தூரம்வரை சாலைகளில் தண்ணீர் தெளித்து வைக்கப்பட்டிருந்தது. தொண்டர்களின் தாகத்தைத் தணிக்கும் பொருட்டுத் தண்ணீர் கொடுக்க வழி முழுவதும் செய்யப்பட்டிருந்த ஏற்பாடு ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. சாலையின் இருபக்கங்களிலும், சில கஜ தூரத்திற்கு ஒருவராகச் சிறுவர்கள் லோட்டாக்களில் தண்ணீர் வைத்துக்கொண்டு இருந்தார்கள். வழியில் அடிகள் தமக்கு அளிக்கப்பட்ட தேங்காய், கதர் மாலைகள் இவைகளை ஏற்றுக்கொண்டார். அடிகள், டிலாட்டை அடைந்தபோது, பால் வெள்ளை போன்ற கதராடை அணிந்த சுமார் நூறு பேர் அவரை வரவேற்றனர். அதுபோது, மகாத்மா ஆரம்பித்துள்ள சாத்வீகப்போரில் எல்லோரும் சேர வேண்டுமென்னுங் கருத்தடங்கிய தம் புதிதாக இயற்றப்பட்டதுமான பாட்டுகள் பாடப்பட்டன. பிறகு அடிகள் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசும்போது, இப்பொழுது சாதாரண லாந்தர்களை உபயோகப்படுத்துவது குறித்து மகிழ்ச்சியுறுவதாகவும், ஆனால் அவைகள் சுதேசி சாமான்களல்லவென்றும், கூடியவரை சுதேசிசாமான்களையே உபயோகப்படுத்த முயற்சிக்க வேண்டுமென்றும், மத்திய மாகாணத்திலுள்ள சில கிராமங்களில் லாந்தர்களே அடியுடன் இல்லையென்றும், அங்குள்ளவர்களுடைய குடிசைகளை நீங்கள் பார்ப்பீர்களே யானால் உங்களுக்கு அழுகை வருமென்றும், இராட்டினம் இல்லாத சமயத்தில் தக்ளி உபயோகப்படுத்துவது நலமென்றுங் கூறினார். முடிவில் கதர், நூல்நூற்றல், மதுவிலக்கு இவைகளைக் குறித்துப் பேசினார். இங்கு அடிகளுடன் நான்கு பெண் தொண்டர்கள் தங்கியிருக்கிறார்கள். இவர்கள் தொண்டர் கூட்டத்துடனேயே சூரத்துக்குச் செல்வார்கள். நோய்வாய்ப்பட்ட தொண்டர்களில் இருவரைத் தவிர்த்து ஏனையோர் சுகமடைந்து தொண்டர் படையில் சேர்ந்துவிட்டனர். ஆனால் ஒரு தொண்டருக்குச் சின்ன அம்மை வார்த்திருப்பதாகத் தெரிய வருகிறது.

31-3-30 அடிகளின் மௌன நாளாகும். எனவே, அன்று காந்தியடிகளின் திருக்கூட்டத்தார் டிலாட் என்னுமிடத்திலேயே தங்கியிருந்தார்கள்.

### சப்ரபத்தா

1-4-30 காலை காந்தியடிகள் திருக்கூட்டத்தார் டிலாட்டிலிருந்து சப்ரபத்தாவுக்கு வந்து சேர்ந்தனர். காந்தியடிகளின் தரிசனத்திற்காகவும், அவருடைய சொற்பொழிவைக் கேட்கவும் ஏராளமான ஜனங்கள் வெளியூர்களிலிருந்து வந்து கூடியிருந்தார்கள். கூட்டத்திற்கு வந்திருந்தோர் அனைவரும் தூய வெண் கதராடை அணிந்திருந்தது குறிப்பிடத் தக்கது. ஒரு பெரிய மாந்தோப்பில் கூட்டம் நடைபெற்றது.

### சூரத்

1-4-30 மாலை, சத்தியாக்கிரகக் கூட்டத்தினர் சூரத்திற்கு வந்து சேர்ந்தனர். சரித்திரத்தில் பண்டைக்காலந் தொட்டு பெரும்புகழ் படைத்த சூரத் நகரத்தை மகாத்மா காந்தியும் அவருடைய தொண்டர்களும் வந்தடைந்ததும், ஜனங்கள் அவர்களை மிக்க ஆரவாரத்துடன் வரவேற்றார்கள். சூரத் நகரத்திற்குச் சுமார் நான்கு மைல்களுக்கு முன்னாடியிருந்தே ஏராளமான ஜனங்கள் வந்து காத்திருந்து அடிகளைவரவேற்றார்கள். பிறகு இரவு ஒரு பெரிய பொதுக்கூட்டம் நடைபெற்றது. சுமார் ஐம்பதினாயிரம் ஜனங்களுக்கு மேல் பிரசன்னமாயிருந்தார்கள். கூட்ட ஆரம்பத்தில் ஸ்ரீமான் கல்யாண்ஜி மேத்தா என்பார், 169 கிராம உத்தியோகஸ்தர்கள் தங்கள் பதவிகளினின்று விலகிக் கொண்டிருப்பதாகத் தெரிவித்தார். பிறகு அடிகளார் பேசுகையில், தமக்குச் சிறைக்குச் செல்ல வேண்டுமென்ற ஆவல் இல்லையென்றும், சிறைக்குச் செல்ல வேண்டுமானால் திருடியோ வேறு விதமாகவோ சுலபமாகச் சிறைக்குச்சென்று விடலாமென்றும், தற்போதைய ஆட்சிமுறையைச் சீர் திருத்துவதோ அல்லது ஒழிப்பதோ தமது நோக்கமென்றும், நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றி வைப்பது ஜனங்கள் கடமையென்றும் கூறினார். பிறகு ஜனங்கள், தங்களாலியன்ற அளவு பண உதவி செய்தார்கள்.

### அரசாங்கத்தாரின் எதிர்ப்பிரசாரம்

சத்தியாக்கிரக இயக்கத்திற்கு விரோதமாக அரசாங்கத்தார், குஜராத்தி மொழியில் பல துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டு எதிர்ப் பிரசாரம் செய்து வருகின்றனர். சுதேச சமஸ்தான ஜனங்களைவிட பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ளவர்கள் சுகமாயிருக்கிறார்களென்றும், பிரிட்டிஷ் இந்தியாவில் வரி விகிதம் மிகக் குறைவாயிருக்கிறதென்றும், அதிகாரிகள்ஜனங்களை மரியாதையுடன் நடத்துகிறார்களென்றும், பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் மகாத்மா காந்தியே இந்த அரசாங்கத்தைப் புகழ்ந்திருக்கிறாரென்றும், மடார், மகம்மதாபாத் தாலூக்காக்களில் பொருளாதார நிலை சம்பந்தமான விசாரணை நடத்த அரசாங்கத்தார் உத்தரவிட்டிருக்கின்றனர் என்றும், கிராம உத்தியோகஸ்தர்களின் குறைகளை அரசாங்கத்தார் பரிகரிக்க முயன்று வருகின்றனர் என்றும் ஒரு துண்டுப் பிரசுரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

### தண்டியில் ஏற்பாடுகள்

காந்தியடிகள் திருக்கூட்டத்தார் சத்தியாக்கிரகஞ் செய்யப்போகும் தண்டி என்னுமிடத்தில் மூன்று கிணறுகளே இருக்கின்றன. அங்குப் போய்ச்சேரும் தொண்டர்களுக்கும் ஜனங்களுக்கும் அதிக தண்ணீர் வசதிகள் செய்து கொடுக்க அருகிலுள்ள கிராமவாசிகள் முயன்று வருகிறார்கள். காராதி என்னும் கிராமவாசிகள், காந்தியடிகள் திருக்கூட்டத்தாரின் உபயோகத்திற்காகத் தண்டியில் புதியதொரு கிணறு தோண்டி வருகிறார்கள்.

கெய்ராஜில்லா டிப்டிகலெக்டர் 29-3-30-ல் போர்ஸாத்தில் போலீஸ் படேல்களின் தர்பார் ஒன்று நடத்தினார். அப்பொழுது, காங்கிரஸ்காரர்களின் பிரசாரத்தினால் போலீஸ் படேல்கள் மயங்கிவிட வேண்டாமென்று கூறினார். படேல்கள் நாற்காலிகளில் உட்கார வைக்கப்பட்டு மரியாதையுடன் நடத்தப்பட்டார்கள். அனைவருக்கும் தாம்பூலங்கள் வழங்கப்பட்டன. பலருக்குச் சால்வைகளும் தலைப்பாகைகளும் வழங்கப்பட்டன.

சத்தியாக்கிரகிகள் உப்பு எடுக்கச் செல்லும்போது அவர்களை எப்படித் தடைசெய்ய வேண்டு மென்பதைப்பற்றிப் போலீஸ் படையைக் கொண்டு வந்து ஒத்திகை நடத்திக் காட்டப்பட்டு வருகிறதென்று பார்தோலி பத்திரிகை கூறுகிறது.

பார்தோலியிலிருந்து நூற்றைம்பது சத்தியாக்கிரகத் தொண்டர்கள் சூரத்திற்கு வந்து சேர்ந்திருக்கிறார்கள். இன்னும் ஐந்நூறுபேர் வருவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது. பார்தோலியில் இதுவரை எழுநூறு தொண்டர்கள் சேர்ந்திருக்கிறார்களென்றும் இவர்கள் 2-4-30 ல் தயாராயிருக்க வேண்டுமென்று உத்தரவிடப்பட்டிருக்கிறார்களென்றும் ஒரு செய்தி கூறுகிறது.

### தொழிலாளர் தொண்டர் படை

ஆமதாபாத் தொழிலாளர் சங்கத்திலிருந்து நூற்றைம்பது தொண்டர்கள் சத்தியாக்கிரகஞ் செய்யச் சித்தமாயிருக்கிறார்கள். ஆமதாபாத் மில் சொந்தக்காரர்கள், ஒரு ஸ்பெஷல் ரெயில் வண்டியில் 1-4-30-ல் சூரத்திற்கு வந்து சேர்ந்திருக்கிறார்கள். இவர்கள் காந்தியடிகளைக் கண்டு பேசுவார்கள்.

### மகாத்மாவின் குடும்பம்

தற்போதைய சட்டமறுப்பு இயக்கத்தில் மகாத்மாவின் குடும்பமே ஈடுபட்டிருக்கிறது. முதலாவது சத்தியாக்கிரகக்கூட்டத்தைமகாத்மாவே தலைமைவகித்து நடத்துகிறார். அவருடைய புதல்வர் ஸ்ரீமான் மணிலால் காந்தியும் இக் கூட்டத்தில் தொண்டராயிருக்கிறார். ஸ்ரீ மணிலால், நேட்டால் "இந்தியன் ஒப்பீனியன்" பத்திரிகை ஆசிரியராவர். இவர் ஒய்வு எடுத்துக்கொள்ள இந்தியா போந்தார். ஆனால் சட்டமறுப்பு இயக்கத்தைக் கேட்டபின்னர் ஒய்வு எடுக்க மனமில்லாமல் தொண்டராகச் சேர்ந்தார். கல்கத்தா விலிருக்கும் அடிகளின் மூத்தபுதல்வரான ஸ்ரீமான் ஹரிலால் மட்டும் இன்னும் இயக்கத்தில் சேரவில்லை. ஆனால் அவருடைய புதல்வர் காந்திலால் முதல் படையில் தொண்டராக விருக்கிறார். பார்டோலி ஆசிரமத்துப் பொக்கிஷதாரரான அடிகளின் மூன்றாவது புதல்வர் ராமதாஸ் தம் வேலையைமற்றொருவரிடம் ஒப்புவித்துவிட்டு சத்தியாக்கிரகப்படையில் சேரத் தயார்செய்து கொண்டிருக்கிறார். அடிகளின் கடைசிப் புதல்வரான ஸ்ரீ தேவதாஸ் காந்தி டெல்லியில் ஜமியாமில்லியா என்னுமிடத்திலிருக்கிறார். அவர் தம்முடன் முஸ்லீம் தொண்டர்படை ஒன்றைத் திரட்டி வருவாரெனத் தெரிகிறது. அடிகளின் மனைவியாரான ஸ்ரீமதி கஸ்தூரிபாய் ஸ்திரீ தொண்டர்களுடன் புரோச் ஜில்லாவில் டிகெல் கிராமத்திற்குச் சென்று சத்தியாக்கிரகஞ் செய்வார்.

### ஸ்டேஷன் மாஸ்டர் இராஜினமா

தென்னிந்திய ரெயில்வே கம்பெனியில் சுமார் பத்தாண்டு காலமாக வேலையிலிருந்து வருபவரும், சில நாட்களாய் திருப்பூர் ரெயில்வே உதவி ஸ்டேஷன் மாஸ்டராயிருந்தவருமான ஸ்ரீமான் சிதம்பர அய்யர் மகாத்மா காந்தியின் சட்டமறுப்பு இயக்கத்தை ஆதரிக்கும் நோக்கத்துடன் தாது வேலையை இராஜினமா செய்துவிட்டாரென ஒரு பத்திரிகை நிருபர் எழுதுகிறார்.







## இயற்கைத் தத்துவ நூலும் சைவ சமயமும்

ஸ்ரீசைவ சித்தாந்த மகா சமாஜத்தூச் சென்ற ஆண்டு விழாவில், திருவாளர் E. N. தணிகாசல முதலியார், பி. ஏ., பி. எல். அவர்கள் அருமைத் திருமகள் இராஜேஸ்வரி அம்மாள், பி.ஏ. அவர்கள் "இயற்கைத் தத்துவ நூலும் சைவ சமயமும்" எனும் பொருள் பற்றி ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அதனை ஷை சமாஜத்தார் இரண்டணா விலையுள்ள ஒரு சிறு புத்தகமாக வெளியிட்டுள்ளார். அது வருமாறு :—

"அன்றே யென்ற னாவியு
முடலு முடைமை யெல்லாமுங்
குன்றே யனையா யென்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ
எண்டோண் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே"

இயற்கைத் தத்துவ அறிவியல் நூல், இருபதாம் நூற்றாண்டு வரை நாஸ்திகத்திற்கு முதல் நூலாய் எண்ணப்பட்டது. சென்ற நூற்றாண்டு இடையே வசித்த ப்ரொபசர் ஹக்ஸ்லி (Professor Huxley) முதலானோர் பசு, பதி, உண்டென்பதை நம்பவில்லை. எடிசனை (Edison) "உனக்கு ஆத்மா உண்டா?" என்று ஒருவர் கேட்டதற்கு, "நியூயார்க் (New York) பட்டணத்திற்கு ஆத்மா யிருந்தால் எனக்கும் ஆத்மா உண்டு" என்று சொன்னார். இவ்வாறு பத்தொன்பதாம் நூற்றாண்டு இயற்கைத் தத்துவ ஆராய்ச்சி நாஸ்திகத்தில் முடியலாயிற்று. ஆனால் இருபதாம் நூற்றாண்டு பிறந்தவுடன் யாவும் மாறலாயின. சர். ஆலிவர் லாட்ஜ் (Sir Oliver Lodge) சர். வில்யம் குருக்ஸ் (Sir William Crookes) முதலானோர் செய்த ஆராய்ச்சிகளில் ஜடபதார்த்த வியற்கை இலக்கணத்தைச் சென்ற நூற்றாண்டில் காட்டியவாறு காட்டாமல் வேறு விதமாய்க் காட்டினர். அதாவது அணுக்கள் தூல சூக்கும நிலையே முடிவல்லவென்றும், காரண அணுக்களே பதார்த்தவடிவிற்குக் காரணமென்றும் ஜடபதார்த்தம் எக்காலத்திலும் அழியாது, ஒன்றுஒன்றாய்மாறுமென்று முன்னிருந்த தத்துவசாஸ்திரிகள் கூறியது பொய்யென்றும் கூறிக் காரண அணுக்களின் நிலையும் குணமும் நிரூபிக்கலாயினர்.

### சூக்கும அணுவின் கட்டிடம்

### Atomic Structure

நமது நாட்டிலும், நமது முன்னோர் காலத்தில் சாக்கியம் வழங்குங் காலத்தில் உலகம் அணுக்கூட்டமென்று மொழிந்த இயற்கைத் தத்துவ சாஸ்திரிகள் பலர் இருந்தனர் என்பதைப் பிரமகீதை முதலிய நூல்களில் காணலாம். அதே மாதிரியாக ஐரோப்பிய நாடுகளில் இத்தகைய கொள்கை பத்தொன்பதாம் நூற்றாண்டில் வழங்கியது ஆச்சரியமல்ல. இரசாயன சாஸ்திரத்தால் (Chemistry) உடைக்க முடியாதென்று நிரூபிக்கப்பட்ட சூக்கும அணுக்கள் (Atoms) ஒவ்வொன்றும் இருபதாம் நூற்றாண்டில் ஆராயுங்கால் சூரியமண்டலத்தைச் சுழன்று ஓடும் கோளங்கள் போலும் (Solar System) இயங்குகின்றன என நிரூபிக்கலாயினர்.

அதாவது ஒவ்வொரு சூக்கும அணுவும் இடையிலே ஆண் தன்மை பொருந்திய கனத்த ஓட்டமற்ற ஒரு காரண அணுவும் பெண் தன்மைபெற்ற இலேசான வெகு வேகமாக இடைவிடாது சுழன்று வருகின்ற பரமாணுக்கள் பலவுமாய் இருக்கின்றதென போர் (Bohr) என்னும் தத்துவசாஸ்திரி நிரூபித்தார். இப்பரமாணுக்களின் சூரிய மண்டலத்தைச் சுற்றி சக்தி சொரூபமான பல அணுக்கள் சுழன்று ஓடும் என்பது நூதன ஆராய்ச்சிகளால் புலப்படுகின்றது. இவற்றுள் இச்சக்திகள் இயக்க பேதமே, வஸ்து பேதத்திற்குக் காரணமாகின்றது. ஒரு கரியின் அணுவை ஆராய்ந்தால் பெண் தன்மைப் பரமாணுக்கள் தொடர்கள் குறைவாய் விளங்கும். இரசாயன சாஸ்திரத்தில் அதே வஸ்து என்று நிரூபித்த வைரத்தின் சூக்கும அணு இத்தகைய பரமாணுக்கள் பெருது அழுந்திய பரமாணுக்கள் பொருந்தக் காணப்படுகிறது. பரம (காரண) அணுக்கள் நிலையை மாற்றக் கூடுமெனின் வஸ்துவை மாற்றக்கூடும். ஆதலால் ஒவ்வோர் அணுவும் ஒரு பெரிய அண்டமாக விளங்குகின்றது. மணிவாசகப் பெருமான் கூறுவதாவது :

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப் பருந்தன்மை வளப்பெருங் காட்சி
யொன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
வின்னுழைக் கதிரின் றுன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் றெரியின்
வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியுந்
தோற்றமுஞ் சிறப்பு மீற்றொடு புணரிய"
திருவாசகம்.

என்பதாம்.

ஆகையால் ஒவ்வோர் அணுவும் ஒவ்வோர் அண்டமாக ஆராய்ச்சியில் விளங்குகின்றது. அது மாத்திரம் அன்று, திருநாவுக்கரசு நாயனார் திருவையாற்றிற் கண்டறிந்ததுபோல், எப்பொருளே நாம் எடுப்பினும் அதில் சத்தி சொரூபமாக விளங்கும். நமது சூரிய மண்டலத்தையும் அதைச்சுற்றி ஓடும் கோளங்களையும் நோக்கின் சூரியன் சிவத்தன்மையையும், பூமி முதலிய கோளங்கள் அதையடையும் சத்திகள் எனவும் எண்ணலாம். ஒவ்வொரு நக்ஷத்திரமும் ஒவ்வொரு சூரியன் எனவும் அதைப் பல கோளங்கள் சுற்றி ஓடுகின்றன எனவும் வானசாஸ்திரிகள் கூறுகிறார்கள். ஆயினும் அவை வெகுதூரத்திலிருக்கின்றனவால், நமது இல்லத்தில் நுழையும் சூரியகதிரில் காணப்படும் பஞ்சவர்ண ஜோதியுடன் விளங்கும் அணுக்கள்போல் காண்கின்றோம். இவ்வணுக்களுக்கும் நக்ஷத்திரங்களுக்கும் முன்னர் பேதம் ஒன்றே. இவை அண்மையிலிருந்தும் அறிவிற்கு அதிதமாக இருக்கின்றன ; அவை சேய்மையி லிருந்து அறிவிற்கு அதீதமாக இருக்கின்றன.

### சக்தி பாய்ச்சல்
### சிவசக்தி - நூதன ஒளிகள்
### (Radiation & Siva Sakti: X-rays)

இனி, பரமாணுவின் சக்தியை ஆராய்வோமாக. இப்போது நூதன வைத்தியத்திலும் பயன்படும் "எக்ஸ்ரே" (X-Rays) யாவருக்கும் தெரிந்ததே. எக்ஸ்ரே என்பது பரமாணுக்களால் எழுப்பப்படும் ஒருவகை ஒளி. ஒரு சூக்கும அணுவில் வதியும் சத்தி சொரூபமான அணுக்கள் வெகு வேகமாக ஓடுமென்பதைக் கண்டோம். அவற்றின் வேகம் $2 \cdot 5 \times 10^9$ C. M. per second அல்லது 25,000 மைல் ஒரு விநாடியில் ஓடும்.

சத்தி சொரூபமான பரம அணுக்கள் சூக்கும அணுவிலிருந்து மின்சாரம் மோதுதலால் பிரிந்து "டங்ஸ்டன்" (Tungsten) என்னும் ஒருவித உலோகத்தில் தாக்குமாயின் எக்ஸ்ரே ஒளி உண்டாகிறது. வேறு உலோகங்களிலும் உண்டாகுமாலும் இதைப்போல் நிலைநின்று ஒளி தராது. ஆதலால் டங்ஸ்டனையே கூலிட்ஜ் டியூப் (Coolidge Tube) முதலியவற்றில் உபயோகப் படுத்துவர்கள். இந்த ஒளியானது சூரிய ஒளிபோல் சுவர் முதலியவற்றால் மறைக்கப் படுவதல்ல. மரத்துக்குள்ளும் இரும்புக்குள்ளும் ஊடுருவிச் செல்லும். இதனாலேயே தேகத்திலுள்ள தசை, எலும்பு முதலியவற்றிலுள்ள ஒவ்வொரு பொருளையும் இவ்வொளியால் கண்ணடிப் பெட்டிக்குள் விருப்பனபோற் காணலாகும். மின்சாரத்தால் எழுப்பப்படும் எக்ஸ்ரே ஒளிபோல் சில ஜட பதார்த்தங்களிலும் இத்தகைய ஒளிகளைக் காணலாமென்பது ஸர். வில்லியம் குருக்ஸ்(Sir William Crookes) அவர்கள் கண்டுபிடித்த விஷயமாகும். இவ்வொளிகள் பலவகை. காஸ்மிக் ரேஸ் (Cosmic rays) என்று சொல்லும் சஞ்சீவி ஒளி முதல் டெத்ரேஸ் (Death Rays) என்று சொல்லும் பெருங்கான விஷ ஒளி ஈறாக ஆல்பா (alpha rays) பீட்டா; (beta rays) காமா; (gama rays) டெல்டா; (delta rays) ரேஸ் என்று சொல்லப்பட்ட பல வகையாக உள. அவற்றுள் காமா ரேஸ் (gama rays) என்று எடுத்துக் காட்டியவை மிகவும் கொடிய ஒளிகள். ஒரு மனிதனை அரைமணி நேரம் அந்த ஒளி தாக்குமாயின் அவன் பிணமாயிருந்தாலும் பதாகிவிடுவான். உலக வழக்கில் கண் திருஷ்டியால் கல்லும் வெடிக்கும் என்பதும் இந்த ஒளியின் உண்மையாலே வந்ததெனலாம். ஆனால் இத்தகைய கொடிய ஒளிகள் வெளியில் வருவது ஏகதேசம். வந்தாலும் அவற்றின் ஆயுளும் மிகவும் சிறிதே. ஏனெனில் அண்டசராசரங்கள் முழுவதும் அரனுடைய நடனம் நிகழ்வதால், இவை முயலகன்போல் ஒடுங்கி நிற்கின்றன. இக்கொடிய ஒளிகளைச் சொல்ல வேண்டிய காரணம் என்னவெனில், இயற்கைத் தத்துவத்தில் கொடிய வஸ்துக்களை அழிக்க இவை ஏற்பட்டிருப்பன வாதலாலேயாம். கருணைநிதியாகிய கடவுள் அஷ்டர்களை, தான் தண்டிப்பதில்லை; அழிப்பதுமில்லை. பாபிகள் தங்கள் பாவத்தால் உலகிலுள்ள அஷ்டசக்திகளே அவரவி அழிகின்றனர். திரிபுர சம்ஹாரத்திற்கு முன்பு தேவர்கள் முப்புரங்களை அழிக்க வேண்டிநின்றனர் அதற்குத் தேர் முதல் ஒவ்வொரு கருவியும் தேவர்களே அமைத்தாரென்றும், எல்லாம் அமைத்தும் எதையும் பயன்படுத்தாமல் சிவபெருமான் நகைத்துத் திரிபுரத்தை அழித்தாரென்றும் புராண மூலமாகக் காண்கின்றோம். இதன் உண்மை என்னவென்று ஆராயும் பகுதியில் சிறிது சிலப்பதிகாரத்தில் வெளியாகின்றது.

"திரிபுர மெரியத் தேவர் வேண்ட
வெரிமுகப் பேரம் பேவல் கேட்ப
வுமையவ ளொரு திறனாக வோங்கிய
விமையவ னாடிய கொடுகொட்டி யாடலுந்
தேர்முன் னின்ற திசைமுக னாணப்
பாரதி யாடிய வியன் பாண்டரங்கமும்"

எனக் கூறப்பட்டு இருக்கின்றது. திரிபுர சம்ஹாரத்திற்கு இன்றியமையாத கூத்து ஒன்றைக் கூத்தன் ஆடினான். ஏன் ஆட வேண்டும்? திரிபுரம் எரியுமாறும். திரிபுரர்கள் வக்ரவுடன் அவற்றின் வருகையாலே இச்சக்தியை அவை ஈர்த்து ஏற்குமாறும், ஏற்றதை எரியுமாறும் இக்கூத்து ஆடினானென்பது திண்ணம். பயனில் தொழில் பரமன் புரிவானல்லன். ஆதலால் பாண்டரங்கக் கூத்தானது தேவர்கள் அறியாச்சக்தி ஒன்றை முன்னிலையில் எழுப்பி வைத்தது. திரிபுரம் வாயும் காந்தம் இரும்பை ஈர்ப்பது போல் இச்சக்தி ஈர்க்க முப்புரங்களும் சாம்பலாயின. இக்காலத்திலே பரமன் நகைத்தார்.

திரிபுரத்தை எரிப்பதற்காக நகைத்தாரென்பது உபசாரம். கோப நகையெனின், மனிதர் குணமாம்; பரமனுக்கு ஏலாது. "அஷ்டராயின பேய்கள் சூழ நடமாடும்" அச்சுதாருக்குக் கோபம் என்பது பொருந்தாது. இவர் சத்துவ மூர்த்தி ஆதலால் நகைத்தது எதற்கோவெனில் (i) இவ்வாறு மூடத்தனத்தால் திரிபுரம் நாசமாயிற்றே என்பது ஒன்று, (ii) நானென்னும் அகந்தை பெற்றுத் தம்மாலே திரிபுர சம்ஹாரம் ஆகுமென்று தேவர்கள் நினைத்தார்களே என்பது மற்றொன்று, (iii) கருணைநிதியாய், நன்மையன்றித் தீமை தாராத நமக்குத் திரிபுர சம்ஹார வேலை வைத்தார்களே என்பது வேறொன்று. இவ்வாறு பற்பல காரணங்களாலே நகைத்திருக்கலாமே யன்றி அழிப்பதற்காகச் சிரிக்க வேண்டியதே யில்லை. இதைத் திருநாவுக்கரசு நாயனர்,

"விரித்த பல்கதிர்கொள் சூலம்
வெடிபடு தமருகங்கை
தரித்ததோர் கோல கால
பயிரவனாகி வேழம்
உரித்துமை யஞ்சக்கண்டு வொண்டிரு
மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச்
செந்நெறிச் செல்வனரே"

என்றார். ஆதலால் தீயவை யழிய தீய சக்திகள் உண்டாய் கருணைநிதி சன்னிதானத்தில் இரண்டும் மாளும் என்பது வெளியாகின்றது.

### கம்பியற்ற தந்தியும், தேவசக்தியும்
### Wireless in relation to Divine Powers

கடவுள் ஜோதி மயமென்றும் எங்கும் நிறைந்தவ ரென்றும் சொல்லப்படுகின்றாரே, அப்படியாயின் நமது கண்ணுக்குப் புலப்படாத காரணம் என்னவென்பர் நாஸ்திகர். தற்காலத்தில் இயற்கைத் தத்துவ நூலில் ஒலி, ஒளி இவற்றின் இலக்கணம் எவ்வாறு நிரூபிக்கப்படுகிறதென்று ஆராய்ந்தால் இதற்கு விடை வெகு சுலபமாகப் பகராகும். உலகத்திலிருக்கும் ஒளிகள் பல. அவைகளில் காணப்படுவன சில. உலகத்திலிருக்கும் ஒலிகள் பல. அவற்றிற் கேட்கப்படுவன சில. மிகவும் அந்தகாரமான அமாவாசை இரவில் இருட்டறையில் ஓடும் ஒரு எறும்பு எவ்வளவு ஒரு பூனை மிகச் சுலபமாகப் பிடித்து விடுகிறது. நமக்கோ பக்கத்திலிருக்கிற வஸ்தும் இன்னதென்று தெரியவில்லை. ஏனெனில் சிறு ஒளி பூனையின் கண்ணுக்குப் போதுமானது; நமக்குப் போதாது. ஒவ்வொரு ஒளியும் கண்ணைத் தாக்குவதற்கு மூன் தாங்க அளவு இவ்வளவு இருந்தால் தான் இக் கண்ணைத் தாக்குமென்று அறிவியல் நூலார் கண்டு பிடித்தனர். அதாவது, வான வில்லில் காணப்பட்ட ஏழு வகை வர்ண வெளிச்சங்களில் வயலெட் (Violet) என்னும் ஒருவகை நீல முதல் இறுதியில் காணப்பட்ட சிவப்பு வரையிலுள்ள தாங்க அளவுகளே நமது கண்ணைத் தாக்கக் கூடியனவாம். இவ்விரண்டு அந்தங்களுக்கும் அப்புறப்பட்டவை நமது கண்ணைத் தாக்கா. தாங்க அளவுகள் 30 மைலிலிருந்து அங்ஸ்டிராம் (Angstrom Unit) யூனிட் என்று சொல்லப்பட்ட ($1 \times 10^{-8}$ Cm.) ஓர் அங்குலத்தில் 100 கோடியில் ஒரு பாகம் வரையில் பல வகுப்புக்களாய் நிற்கின்றன. முதல் வகுப்பு இக்காலத்தில் கம்பி யில்லாத் தந்தி என்று சொல்லும் (Wireless) மின்சாரத்தில் பயன்படுவது. இது ஓசையின் கோடியம்ச பின்னமான பின்னத்தை உலகத்தில் எத்தலத்தினின்றும் எத்தலத்திற்கும் எடுத்துச் செல்லத்தக்கதாம். கம்பியில்லாத் தந்தி என்னும் கருவி பல பக்கங்களிலும் செல்லும் நாதத்தை ஒருங்கு சேர்த்து ஓசையாக்கி அவ்வோசையால் தந்தி சமாசாரம் போல் தெரிவிக்கும். கடலிடையும் மின்சாரத் தபால் பெறுகின்றோம். சுந்தரமூர்த்தி நாயனர் கடவுளை இயற்கைத் தத்துவ இலக்கணத்தில் துதி செய்யும்போது,

"நாதனை நாதமிகுந் தோசைய தானவனை
ஞானவிளக் கொளி யாமூனுயிரைப் பயிரை
மாதனை மேதகு தன்பத்தர் மனத்தறையும்
பற்று விடாதவனைக் குற்றமில் கொள்கைய [னாத்
தானை யென்றனை யாடோழனை நாயகனைத்
தாழ்மகரக் குழையுந் தோடு மணிந்ததிருக்
காதனை நாயடியே னெய்துவ தென்று [கொலோ
கார்வயல்சூழ்கானப் பேருறை காளையையே"

நாதம், ஓசை, ஒலி, என்றது மூன்று அந்தஸ்து. ஓசை என்பது சமீபத்தில் கேட்கக்கூடியது. டெலிபோனில் (Telephone) கேட்கக்கூடியது. ஒலி என்பது வெகுதூரத்தில் கேட்கக்கூடியது. ஓசை ஒலியுமே நம் காதுக்கு எட்டக்கூடியன.

ஓசையின் தாங்க அளவு குறையுமாயின் நமது காதுக்குக் கேளாது. ஒரு வெண்கல மணியை அடித்து விட்ட பிறகு நமக்கு ஓசை கேட்பதில்லை. ஆயினும் ஓசை நமக்குக் கேளாது விட்ட பொழுதிலிருந்து அரை நிமிஷம் பொறுத்து நமது காதை அம்மணியினிடம் வைப்போமானால் "உம்" என்கின்ற சிற்றோசை கேட்கலாம். ஒலியும் மிகப் பேரொலியாயின் நமது காதில் படாது. கோளங்கள் மிக வேகமாக ஓடுவதால் பேரொலி கிளம்பினும், நமது காதில் விழுவதில்லை. எங்ஙனமெனின், சமுத்திரக் கரையில் வசிக்கும் பட்டினவர்களுக்குச் சதா சமுத்திர ஒலி தாக்கப்படுவதால் அவர்கள் அதை அறிவதேயில்லை. அது போல் நாம் சதாபெரிய ஒலியில் இருப்போமாயின் அந்த ஒலியின் அநுபோகமே யிராது. ஆதலால் நமது கண்ணுக்காகிலும், செவிக்காகிலும் ஏற்பட்ட அளவுகள் எவ்வளவோ அவ்வளவு தாக்கமுள்ள ஒளி, ஒலி, காணல்கேட்டல், கூடுமேயன்றி அவ்வளவுக்குச் சிறுத்தும் பெருத்தும் அறிய நமக்குப் புலன்களில்லை. பூனை காணக்கூடிய ஒளி நமக்குப் பயன்படாதெனின், ஓர் அணுவுக்குள் ஜொலிக்கும் ஒலியை நாம் காணக்கூடுமோ? அதே மாதிரியாகக் கோடி சூரியப் பிரகாசமான வஸ்துவை நாம் காணக்கண் உண்டோ? எங்கும் நிறைந்த கடவுள் ஜோதியாய் விளக்குவது உண்மையே. அச்சோதியைக் காண நமக்குக் கண்ணில்லாததால் அச்சோதி இல்லை யென்று கொள்ளலாமோ? சம்பந்த மூர்த்தி நாயனர்—கடவுளை அநுமானப் பிரமாணத்தில் காட்டலாகாதென்றார். ஏனென்றால் சிவ பெருமான் பிரத்தியக்ஷ உண்மை, அநுமானப் பிரமாணத்தில் காணலாகாது. அநுமானப் பிரமாணம் எப்பொழுது பயன்படுமெனில் "சேய்மையிலுள்ள வஸ்து எது?" என்று ஆராய்வதற்குப் பயன் படும். அண்மையில் பிரத்தியக்ஷமான வஸ்துக்கு அநுமானப் பிரமாணம் பொருந்தாது. தூரத்திலுள்ள மலையில் புகை காணப்படுவதால் நெருப்பு உண்டென்று அநுமானிக்கலாம். எதிரிலுள்ள தீக்கு என்ன அநுமானம் காட்டுவது? காணுதவர்கள் காணுதவர்களே, கண்டவர்கள் கண்டவர்களே.

"கூட்டினர் கிளியின் விருத்த
முரைத்ததோ ரொலியின் ஞெழிற்
பாட்டு மெய்சொலிப் பக்கமே
செலுமெக்கர் தங்களைப் பல்லறம்
காட்டியே வருமாடெலாங் கவர்கை
யரைக் கசிவொங் திலாச்
சேட்டைகட் கெளியே னலேன்
திருவால வாயர னிற்கவே"

சிவபெருமான் உண்டென்பதற்குப் பக்கம் அதாவது பக்ஷம் சொல்லுவதற்கு முடியுமோ?

புகலி வேந்தன் (சம்பந்தன்) சிவ பெருமானைப் பிரத்தி யக்ஷத்தில் காண்கின்றேன், என்ன அத்தாட்சி வேண்டும் என்றார். சமணர் நெருப்பில் உமது தேவாரத்தை இடும் என்றார். இட்ட ஓலை பச்சென்றிருந்தது. ஏனெனில் நெருப்புக்கு அதைத் தாக்கும் சக்தி போய் சிவத்தன்மையாய் ஒழிந்தது. பச்சென்று காணப்படும் ஓலையும் நெருப்பின் குணம் பெற்றிருந்ததால் நெருப்பால் நெருப்பழியவில்லை. சமணரிட்ட ஓலை நீறாயிற்று. ஆதலால் பிரத்தியக்ஷத்திலிருந்த ஜோதியைக் கண்ட சம்பந்தர் நெருப்பின் குணத்தை மாற்றலானார். இதைச் சமணர்கள் நெருப்புக் கட்டுவித்தை யென்றார்கள்.

ஒரு குழந்தையானது கண்ணைத் திறந்து உலகத்தைப் பார்க்கும்போது எவ்வளவு ஆநந்திக்கிறதென்றும் பார்க்கலாம். எல்லாம் கடவுள் ஜோதியாகக் காணப்படும். அதனால் அது களிக்கிறது, நகைக்கிறது. நாமும், நாம் இருக்கும் தலம்விட்டு நூதன ஸ்தலத்திற்குப் போவோமாயின், அங்குக் காணும் தோற்றங்கள் நமக்கு ஆச்சரியமாகவேயிருக்கும் ஆனால் குழந்தை காணும் ஆச்சரியம் போல் அவ்வளவு உண்டாவதில்லை. ஏனெனில் குழந்தை வளர, வளர, உலகபாசத்தில் [illegible] டுபட்டு எங்கும் விளங்கும் பரம [illegible] மறக்கின்றது. மாணக்கவாசக [illegible] யின் அணுவுக்கு அநுபிதும் [illegible]

மகத்திலும் இந்த ஜோதியைக் காணலாம். இன்றேல்,

"பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்"

ஆசையால் கடவுள் பிரத்தியக்ஷத்திலிருந்தும் நாம் காணாதிருப்பது நமது தோஷமேயாம்.

அனலும் அதன் தத்துவமும்

முன்னரே ஒவ்வொரு பரமாணுவும் சிவ சக்தி சொரூபமாய் விளங்குகிறதென்று கூறினேன். சிவத்தன்மையானது ஜோதி வடிவம். உஷ்ணம் இன்றேல் ஜீவன் இன்றாம். ஒரு மனிதன் இறந்தானென்பது உஷ்ணத்தாலே அறியப்படும். சாதாரணமான உஷ்ணம் நீங்க உயிர் நீங்குவது போல் எவ்வஸ்துவை எடுப்பினும் உயிரற்ற பதார்த்தமேனும் உஷ்ணம் முழுமையும் அற்றுவிடுமாயின் உருவே அற்றுவிடும். உஷ்ணமானது பனிக்கட்டியிலு முண்டு. பனிக்கட்டி உஷ்ண அளவைக் கருவியில் (Centigrade Thermometor) சைபர் காட்டும் ஆயினும் தற்காலத்தில் காற்றை நீராக்கி (Liquid air) இருக்கின்றார்கள்; அத்தகைய நீரில் ஒரு துண்டு பனிக்கட்டி போடுவோமானால் நெருப்பு இட்ட நீர் போல் அந்நீர் (Liquid air) கொதிக்கும். இதனால் பனிக்கட்டியும் உஷ்ண முடையதென்று ஏற்படும். பனிக்கட்டி உறையும் நிலையிலிருந்து தண்ணீர் கொதிக்கும் நிலைவரை (From O· Centigrade-melting point office to 100· Centigrade Boiling point of water) நூறு படிகள் இருப்பது போல் பனிக்கட்டி உறையும் நிலையின்கீழ் இருநூற்று எழுபத்து மூன்று (273.C. absolute zero) படிகள் இருக்கின்றனவென இயற்கைத் தத்துவ நூல் நிபுணர்கள் கூறுகின்றனர். இவ்விரு நூற்று எழுபத்து மூன்று படியிலும் ஒரு வஸ்து இறங்குமாயின் அதன் உருவம் குணம் யாவும் போய் வஸ்துவே ஸ்தூலமாய் இல்லாமற் போய்விடும்.

ஸ்தூலத்தில் வஸ்து அழிவது உண்மை என்பதை ரேடியம் Radium) யுரேனியம் (Uranium) முதலான உலோகங்களால் நிரூபிக்கலாம். சக்தி குறையக் குறைய எவ்வஸ்துவும் அழிவு காலத்திற்குச் சமீபிக்கிறது. உயிருள்ள பொருளாயினும் சரி, உயிரற்ற பொருளாயினும் சரி, சட்டம் ஒன்றே. சக்தியால் பொருள் நிலைப்பதும் பொருளைச் சக்திகள் அவாவுதலும், நம்முன்னோர் வேறு வகையால் மொழிந்தனர்.

"சிவன் சக்தி தன்னை ஈன்றும்
சக்திதான் சிவத்தை ஈன்றும்
உவர் திருவரும் புணர்ந்திங்
குலகுயிர் எல்லாம் ஈன்றும்
பவன் பிரமசாரி யாகும்
பான் மொழிகன்னியாகும்
தவந்தரு ஞானத் தோர்க்கு
இத்தன் மைதான் தெரியுமன்றே"

என்றார் அருணந்தி சிவாசாரியார்.

ஓசையும் பண்ணும்

Sound & Music

உஷ்ணமானது சக்தி. அது நவசக்தி என்றோம். இவ்வுண்மையே தழலாய்ச் சிவபெருமான் திகழ்கின்றாரென்று தேவாரத்தில் ஆங்காங்கு மொழியப்படும். உஷ்ணம் ஸ்தூல அணுக்களை உடைப்பதற்கும் கூட்டுதற்கும் இன்றி அமையாத கருவி. இது போல் சூக்கும அணுக்களை உடைக்கவும் கூட்டவும் இரசாயனத்துணை வேண்டும். பரமாணுக்களைப் பகுக்கவும் சேர்க்கவும் கருவி யாது? இன்னும் ஐரோப்பிய அறிவியல் நூல்கள் கண்டுபிடிக்கவில்லை. ஆயினும் யுக்திக்குப் பொருத்தமான கருதிகள் நமது சைவத்தில் உண்டு. அதாவது எவற்றாலும் ஆகாத காரியமும் தமிழ்ப் பண்ணால் ஆகுமென்பதே.

(i) சமணர் ஏவிய யானையை அப்பர் வெருட்டியது காந்தாரப் பண்ணாகும். (ii) விஷம் தீர்த்த பதிகங்களின் இசையாலேயே, அப்பரும் சம்பந்தரும் பாம்பால் இறந்தவர்களை எழுப்பினர். (iii) திருஞான சம்பந்தரும் தீயிலிட்ட தன் ஏட்டை உஷ்ணம் தாக்காது பரமாணுக்களுக்கு உரம் (Tone) கொடுத்தது அவருடைய இசையே யாகும். இசையே கடவுள் வடிவம் என்று சம்பந்தர் கூறி யிருக்கிறார்.

"ஈறாய் முதலொன்றா
யிருபெண்ணாண் குணமூன்றாய்
மாறா மறை நான்காய்
வருபூதம் மவையைந்தாய்
ஆறார் சுவையே ழோடிசை
யெட்டுத் திசைதானாய்
வேறா யுடனானிடம்
வீழிம் மிழலையே." (i)

"பண்ணும் பதமேழும்
பலவோ சைத்தமிழவையும்
உண்ணின்ற தோர்சுவையும்
முறுதாளத் தோலிபலவும்
மண்ணும் புனலுயிரும்
வருகாற்றுஞ் சுடர் மூன்றும்
விண்ணும் முழுதானானிடம்
வீழிம் மிழலையே." (ii)

நமது சித்தாந்தத்தில் மாத்திரம் அன்று. புராதீன கிரீக்கர் (Greeks) காவியங்களில், அப்பாலோ (Apollo-The Sun, God of Music) என்னும்பானுமூர்த்திதான் குழலூதியாய் (Troy) என்னும் பட்டணத்தை எழுப்பியதாகக்காண்கிறோம். பராசக்தியானது பிரளய காலத்தில் சிவபிரானில் ஒடுங்கும்போது உலகத்திலுள்ளஎல்லாப்பொருள்களும் சத்தியால் உண்டாகும் இயக்கமற்று அழியும். பிரமனும் மாள, விஷ்ணுவும் மாளத் தனியாய் நின்ற பரமன், மறுபடியும் உலகத்தை வெளியிற் கொண்டு வர என் செய்வாரென்பதைத் திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணலாம். பிரளயத்தை நீக்க அவர்கையில் வீணையன்றி வேறொரு கருவியுமில்லை. அதன் இசை தவிர வேறொரு துணையுமில்லை.

"பெருங்கடல் மூடிப் பிரளயங்
கொண்டு பிரமனும் போய்
இருங்கடன் மூடி யிறக்கு
மிறந்தான் களே பரமும்
கருங்கடல் வண்ணன் களே
பரமுங் கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீள நின்றெம்
மிறை நல்வீணை வாசிக்குமே"

முடிவுரை

Conclusion

ஆகையால், தற்காலத்தில் இயற்கைத் தத்துவ நூலில் மேற்கண்டவாறு மின்சார அத்தியாயத்திலும், ஒலி, ஒளி, ஓசை என்கின்ற அத்தியாயங்களிலும் ஏற்பட்ட நூதன ஆராய்ச்சிகள் சைவசமய உண்மைகளை நிலைநிறுத்திக் கொண்டு வருகின்றன. இப்போது இவ்வறிவியல் நூலுக்கும் சைவத் திருமுறைகளுக்கும் பத்தொன்பதாம் நூற்றாண்டிலுள்ள அவ்வளவு வேற்றுமை இல்லை.

சைவ சமயத்தை இயற்கைத் தத்துவநூல் சமீபத்துக் கொண்டே வருகின்றது. இன்னும் பல அறிஞர்கள் இந்நூற்றாண்டில் ஆராய்ச்சிகளில் செல்லச் செல்ல சைவ மறைகளும் அறிவியல் நூலா? இயற்கைத் தத்துவ அறிவியல்நூல் சைவமறையா? என்னும் சந்தேசம் உண்டாக்கும் நிலைக்கு வருமென்று நம்புகின்றேன்.

Printed and Published by T. V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudaly St., Royapettah, Madras.

